# கல்கி

KALKI
30.9.90
ரூ. 2.50

இன்னும் சில வீடுகள்! மேலும் சில வாசல்கள்!

—ஒரு விவாதம்



# பெண்மையின் மென்மைக்கு
# பேரெழில் சேர்த்திடும் ஹனீபாவின் பட்டு!



புதுமையான புத்தம் புது டிசைன்களில்
எண்ணற்ற வண்ணங்களில்
தரத்தில் நிகரில்லாத பட்டுப் புடவைகளால்
ஒரு பட்டுலகையே படைத்துள்ளோம்.
தீபாவளிப் பண்டிகையின் பரவசம்
என்றென்றும் நிலைக்க ஹனீபா பட்டுபுடவைகள்!

**ஹனீபா டெக்ஸ்டைல்ஸ்**

14, சர் தியாகராய சாலை, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 600 017

CANCO

# கவிஞர் வைரமுத்து

எழுதும்

# சிகரங்களை நோக்கி...

புதிய தொடர்கதை



**கல்கி**

அக்டோபர் 21
தீபாவளி சிறப்பிதழில்
ஆரம்பம்

# இன்னும் சில வீடுகள்! மேலும் பல வாசல்கள்!

## —ஒரு விவாதம்

**ஆணாதிக்கம் என்பது 'ஒரு வீடு இரு வாசலில்' மட்டும்தானா இருக்கிறது? இன்னும் சில வீடுகள் — மேலும் பல வாசல்களில் இருக்கிறது என்று விவாதிக்கிறார்கள் திருமதி இந்துமதி, திருமதி நிர்மலா சுரேஷ், செல்வி வைஷ்ணவி ஆகியோர்...**

இந்துமதி, நிர்மலா சுரேஷ் (இருவரும்): 'ஒரு வீடு இரு வாசல்' படத்தில் நீங்கள் ரொம்ப அற்புதமாக நடித்திருக்கிறீர்கள் வைஷ்ணவி. அதற்கு எங்கள் பாராட்டுக்கள்.

வைஷ்ணவி: நன்றி. ஆனால் பல ஆண்கள் அந்தப் படத்தைப் பார்த்து விட்டு என் மீது கோபமாக இருக்கிறார்கள். என்னோடு நடித்த ஹீரோ கூட 'என்ன எப்போது பார்த்தாலும் என்னைத் திட்டிக் கொண்டே இருக்கிறாய்?' என்று ஷூட்டிங் போது சொன்னார்! அந்த அளவுக்கு அப்படம் சிந்தனையைக் கிளறி விட்டிருக்கிறது.

நிர்மலா: நிறையப் பேர் பெண்கள் பிரச்னைகள் பற்றித் தெரியாமலேயே கதை எழுதுகிறார்கள்; படமெடுக்கிறார்கள். அப்படிப் பார்க்கும் போது பாலசந்தர் இதில் மிகவும் சிறப்பாகச் சொல்லியிருக்கிறார்.

வைஷ்: இந்தப் படத்தைப் பார்க்கும் ஆண்களே கூட இப்போது பாராட்ட ஆரம்பித்திருக்கிறார்கள்.

இந்து: ஆண்கள் இப்படத்தை மனத்துக்குள் வெறுத்தாலும் கூட வெளியில் பாராட்டித்தான் ஆக வேண்டும். காரணம், இது உண்மையைப் பிரதிபலிக்கும் படம்.

வைஷ்: சமுதாயத்தில் பெண்களின் நிலை பற்றி ஆண்களுக்கு மிக நன்றாகவே தெரியும்!

நிர்: பாலசந்தர் இப்படத்தில் காட்டியுள்ளபடி, வேலைக்காரியைத் தவறாக உபயோகித்துக் கொள்வதென்பது நிறைய வீடுகளில் நடந்து கொண்டிருக்கிற ஒரு விஷயம்.

வைஷ்: ஆமாம்.

இந்து: நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள். எனக்குத் தெரிந்து ஒரு டாக்டர். அவருடைய பர்சிலிருந்து வேலைக்காரப் பெண் பணத்தை எடுத்திருக்கிறாள். அப்போது அவர் கையுங்களவுமாகப் பிடிக்க எண்ணி, அப்பெண் பணத்தை எடுக்கும் போது, அவள் கையைப் பிடித்திருக்கிறார். அப்போது, அவள் என்ன செய்தாள் தெரியுமா? 'ஐயோ! டாக்டர் என் கையைப் பிடித்திழுக்கிறாரே' என்று கூச்சல் போட்டிருக்கிறாள்... இதற்கு என்ன சொல்கிறீர்கள்?

நிர்ம: இப்படியும் ஒன்றிரண்டு இருக்கலாம். ஆனால், பொதுப்படையாகப் பார்க்கும் போது, வேலைக்காரப் பெண்களை ஏமாற்றுவதென்பது நடந்து கொண்டிருக்கிற ஒரு விஷயம்தான். அப்புறம், எந்தவோர் ஆணும் தன் மனைவி தன்னைவிட அழகாக இருந்தால் ஒப்புக் கொள்வான்; தன்னை விடக் குணவதியாக இருந்தால் ஒப்புக் கொள்வான். ஆனால், தன்னை விட அவள் அறிவாளியாக இருந்தால் மட்டும் ஒப்புக் கொள்ளவே மாட்டான்!

வைஷ்: அங்கு ஆண்களுக்கே உரிய 'ஈகோ' வந்துவிடுகிறது.

இந்து: ஆமாம். சில ஆண்கள் தங்கள் மனைவி அழகாக இருந்தால் அவர்களுடைய நண்பர்கள் வரும்போது, மனைவியை உள்ளே போகச் சொல்லி விடுவார்கள். ஆனால் இவர்கள் மட்டும் அடுத்தவன் மனைவியோடு பேசிக் கொண்டிருப்பார்கள்...

நிர்: எனக்குத் தெரிந்து ஒரு மேக்கப் வுமன். அவர் பலருடைய முகத்தையும் தொட்டு மேக்கப் போட வேண்டுமென்பதால், அதை அவர் கணவன் ஒப்புக் கொள்ள

வில்லை. வேறு வழியின்றி அவர் தமது வேலையையே விட வேண்டியதாயிற்று.

இந்து: அழகு நிலையங்களில் வேலை பார்க்கும் பெண்களின் நிலையும் அப்படித் தான். எங்கோ ஓரிரு இடங்களில் தவறு நடக்கிறது என்பதற்காக, எல்லாப் பெண்க ளுமே அப்படித்தான் என்று நினைக்கிறார் கள். அப்படி வேலை பார்க்கும் பெண்களைத் திருமணம் செய்து கொள்ளக் கூடப் பலர் முன் வருவதில்லை. இது நமது சமுதாயத்தி லுள்ள மிகப் பெரிய குறை...

நிர்: இதற்குக் காரணம், நமது சமுதாயம் ஒரு closed society யாக இருப்பதுதான். மரபு, பண்பாடு என்று பெண்களை அடக்கிக் கொண்டே வந்ததன் விளைவு. அதே மரபு களும் பண்பாடும் ஆண்களுக்குக் கிடை யாது.

இந்நிலையில் என் கணவருக்கு மாற்றல் என்றால் பிரச்னையில்லை. ஆனால் எனக்கு மாற்றல் என்றால், அவர்களை யெல்லாம் யார் கவனித்துக் கொள்வது? இதுதான் பிரச்னையே... எனவே, குடும்ப நலன் கருதி பெண்தான் விட்டுக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படி விட்டுக் கொடுப்பதென்பது உரிமைகளைப் பாதிப் பதாக எடுத்துக் கொள்ள முடியுமா?

நிர்: குடும்ப நலனுக்காக யாராவது ஒருவர் விட்டுக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். ஆனால் பெண்கள் மட்டும்தான் விட்டுக் கொடுக்க வேண்டுமா? உதாரண மாகக் கல்வியை எடுத்துக் கொள்வோம். எஸ். எஸ். எல். சியிலிருந்து பட்டப்படிப்பு வரை ஆண்களை விடப் பெண்கள்தான் அதிக சதவிகிதத்தில் தேர்ச்சி பெறுகிறார்



* நிர்மலா சுரேஷ் * இந்துமதி * வைஷ்ணவி

இந்து: பெண்களின் உரிமைகள் என் னென்ன? இவற்றில் பலருக்குக் குழப்பமே இருக்கிறது.

நிர்: கணவனின் அனாவசியத் தலை யீடுகள் இருக்கக் கூடாது. பல பெண்களின் வாழ்க்கையை எடுத்துக் கொள்ளுங்கள்... பதவியுயர்வு கிடைத்தால் மாற்றலில் போக வேண்டியிருக்குமே என்பதால் பலரும் பதவி யுயர்வை வேண்டாமென்று சொல்லுகிறார் கள். அவர்களின் திறமை அங்கே பயன் படாமல் போகிறது.

இந்து: எனக்கு மகன் இருக்கிறான். வீட்டில் மாமனார், மாமியார் என்று பெரிய வர்கள் இருக்கிறார்கள். நான்தான் அவர் களைக் கவனித்துக் கொள்ள வேண்டும்.

கள். அவர்கள்தான் அதிக மதிப்பெண்கள் வாங்குகிறார்கள். ஆனால் அப்படிப்பட்ட பெண்களில் பத்து சதவிகிதம் பேர் கூட வேலையில் தொடர்ந்து நீடிப்பதில்லை. பெண்களின் திறமையெல்லாம் குடும்ப வாழ்க்கை ஒன்றிலேயே கரைந்துபோய் வெளியுலகத்துக்குப் பயன்படாமலேயே வீணாகி விடுகிறது. இந்தக் குறைபாடு களையப்பட்டாக வேண்டும்.

இந்து: இப்போதாவது பரவாயில்லை, முன்பெல்லாம் வேலைக்குப் போகும் பெண் என்றாலே பலரும் திருமணம் செய்து கொள்ளக் கூட மாட்டார்கள்.

நிர்: என்னதான் மாறியிருந்தாலும், வர தட்சணைக் கொடுமை என்பது இன்னும்

மாறவேயில்லையே... அந்தக் காலத்தில் பெண் கல்வியுமில்லை; சொத்துரிமையும் இல்லை. அதனால், பெற்றோர் அவர்களாகவே ஆசைப்பட்டுத் தங்கள் பெண்களுக்குச் சீதனம் கொடுத்தார்கள். இப்போது பெண்களுக்குச் சொத்துரிமை வந்துவிட்ட நிலையிலும் அதோடு கூடவே வரதட்சணையும் கேட்கிறார்களே!

இந்து: அப்படிக் கேட்பவர்களுக்குத் தங்கள் பெண்களைத் தரமாட்டோம் என்கிற உணர்வு பெற்றோருக்கு வர வேண்டும். பெண்களும் அப்படிப்பட்டவர்களைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது. பிடிவாதமாக மறுத்துவிட வேண்டும்.

நிர்: நாம் அப்படிச் சொன்னால், 'உங்களுக்கென்ன... கல்யாணமாகி விட்டது; அதனால் அப்படிப் பேசுகிறீர்கள். எங்களுக்கு ஆக வேண்டாமா?' என்று நம்மையே திருப்பிக் கேட்பார்கள். இதுபற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் வைஷ்ணவி?

வைஷ்: நான் திருமணமே செய்து கொள்ளப் போவதில்லை. ஏனெனில் கல்யாணத்திற்குப் பிறகு எனது சுதந்திரம் பறிக்கப்படாது என்பதற்கு எந்தவிதமான உத்தரவாதமும் கிடையாதே....! இந்நிலையில் எனது திருமணம் எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்குமா? கொடுக்காது. ஏதாவதொரு வகையில் ஆணாதிக்கம் குறுக்கே வந்து எனது சந்தோஷத்தைக் கெடுத்துவிடும். அப்புறம் எதற்குத் திருமணம்?

இந்து: திருமணத்திற்குப் பிறகு சில விஷயங்களில் ஆண்கள் கூடத்தான் தங்கள் உரிமைகளை இழக்கிறார்கள் வைஷ்ணவி.

வைஷ்: இதை நான் நம்ப மாட்டேன்.

இந்து: இப்படியே அனைவரும் கூறினால் நாட்டில் யாருக்குமே திருமணம் நடக்காது.

வைஷ்: நான் எனது கருத்தைத்தான் சொன்னேன்.

நிர்: ஆணும் சரி, பெண்ணும் சரி, திருமணத்திற்குப் பிறகு சமமாக விட்டுக் கொடுத்தால் பிரச்னையே இல்லை. நூறு சதமும் பெண்கள்தான் விட்டுக்கொடுக்க வேண்டும் என்கிற போதுதான் பிரச்னைகள் வருகின்றன.

இந்து: நான் ஏதாவது வெளியூர் செல்ல வேண்டியிருந்தால் அது என் உரிமை என்று பிடிவாதமாகச் செல்ல மாட்டேன். நான் வெளியூர் செல்வதால் என்னென்ன பிரச்னைகள் வரும் என்று யோசிப்பேன். நான் இல்லாத போது குடும்பத்தைக் கவனித்துக் கொள்ள என் கணவரால் முடியாது என்கிற நிலையில் நான் போக மாட்டேன். என்னைப் போல்தான் அவரும். ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுப்பதால் பிரச்னைகளே வருவதில்லை.

நிர்: ஒரு பொது நிகழ்ச்சிக்காக மனைவி வெளியூர் போவதால் வீட்டில் ஏதும் பிரச்னைகள் வராது என்கிற நிலையிலும், கணவன் அவளைப் போகக் கூடாது என்று ஆதிக்கம் செலுத்துகிறானே அதுதான் கூடாது என்கிறோம்.

வைஷ்: தங்களுடைய நிலைக்காகக் குரல் கொடுக்கக் கூடப் பெண்களால் முடிவதில்லை. அந்த அளவுக்கு அவர்கள் சமூகத்தில் அடக்கி வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்து: இதற்குக் காரணம், கற்பு என்பது ஆண்களுக்குத் தனி, பெண்களுக்குத் தனி என்று ஆண்களே வகுத்து வைத்திருப்பதுதான்.

நிர்: அதுபோன்ற ஆண்களை விட்டு விலகி வருவதற்குப் பெண்கள் தயாராக இருக்க வேண்டும். இதில் வேடிக்கை என்னவென்றால், கணவன் வேறொரு பெண்ணிடம் முறைகேடாக நடந்து கொள்கிற போது, அந்த மனைவி பாதிக்கப்

**அடுத்த இதழில்...**

0 "குடிநீர் வழங்குவது எம்.எல்.ஏ. வேலையில்லை!" — தாரமங்கலம் எம். எல். ஏ. கூறுகிறார்...

0 போதைப் பொருள்களின் பயங்கரம்! — சிவசங்கரி எழுதும் கவர் ஸ்டோரி



வாழ்க்கையில்
சில நல்ல வழக்கங்கள்
மாறுவதில்லை.

முனை மாங்காய் பார்டருடன் கூடிய ராசி
மாங்காய் பார்டர். மயில் வண்ண ஹாஃப் டிஷ்யு

பண்டிகைக் காலங்களுக்கு

# ராசி

பட்டுப்
புடவைகள்



## ராதா சில்க்
## எம்போரியம்

1, சன்னதித் தெரு,
மயிலாப்பூர், சென்னை-600004.

Efficient/RASI/14/90

# ESSAY COMPETITION ON WOMEN ENTREPRENURSHIP

Conducted by

EMGEEBEE INDUSTRIAL ADVISORY & MONITORING SERVICES (P) LTD. (EIAMS)

A study by EIAMS on the "Status and Opportunities for Entrepreneurship of Women in Tamil Nadu", has been co-sponsored by IDBI, TIIC and Dew. In this connection EIAMS will be holding an essay competition for women only. The topic for the competition is 'The Affirmative actions to be taken by Industry, Banks, Financial Institutions and the Government, both Central and State, to encourage and foster self-employment amongst women'.

There will be one First prize of Rs.500/-, Two Second Prizes of Rs.250/- each and Four consolation prizes of Rs.50/- each, for each of the three following categories of participants.

| | | |
|---|---|---|
| CAT | I | (a) Existing women entrepreneurs and (b) Women who have undergone EDP. |
| CAT | II | Ladies Clubs and Women's Organisations. |
| CAT | III | (a) Women graduates and licentiates, both employed and unemployed, and<br>(b) Women scholars studying in colleges and polytechnics. |

Those participating in the competition are requested to register by sending a post card to EIAMS referring to this advertisement and giving their name and address. On being registered, EIAMS will send the participant a background paper on self-employment of women. The last date for registration is 10th October 1990. The last day for receipt of the essay is 10th November 1990.

All correspondence to be addressed to.

EIAMS (P) LTD.
POST BOX NO. 2916
MADRAS - 600 004.

# பாபா சொன்ன அனுமன் கதை!

நம்முடைய உணர்ச்சிகள் எப்படி நம் அறிவை மறைத்து விடுகின்றன என்பதற்கு ஒரு கதை கூறினார் பாபா:

"துளசிதாஸர் இலங்கையின் இயற்கை அழகை வர்ணிக்கும் போது வனங்களின் பசுமை எழிலையும் மலர்களின் தூய வெண்மையையும் குறிப்பிட்டார். அருகில் கதை கேட்டுக் கொண்டிருந்த அனுமார், துளசிதாஸர் கூறுவதும் எழுதுவதும் தவறு என்றும் தாம் இலங்கையில் இருந்த போது எல்லாமே சிவந்து காணப்பட்டன என்றும் பெரிதாக வாதாடினார். அப்போது ராமர் அங்கே தோன்றி, அனுமனைச் சமாதானப் படுத்தி பின்வருமாறு கூறினார்:

'துளசிதாஸர் தமது சத்திய உள்ளத்தின் ஆழத்திலிருந்து பிறக்கும் எண்ணங்களை எழுதுகிறார். அதனால் மலர்களையும் வனங்களையும் அவற்றின் உண்மை நிறத்தில் பார்த்து எழுதுகிறார். ஆனால் நீ இலங்கையில் இருந்த போது கோபத்தால் சிவந்த கண்களால் அனைத்தையும் பார்த்தாய். சினத்தின் நிறம் சிவப்பே. ஆதலால் உனக்கு எல்லாமே சிவப்பாகத் தெரிந்தன...'

"நமது மனத்தை உணர்ச்சிவசப்படாமல் வைத்துக் கொண்டு ஒவ்வொரு விஷயத்தையும் பிரச்னையையும் அதன் உண்மை வடிவத்திலும் நிறத்திலும் பார்க்க நாம் கற்றுக் கொள்ள வேண்டும்" என்று கூறி முடித்தார் பாபா.

**(ஸ்ரீ சத்ய சாயி பாபா தம்மைச் சமுதாயப் பணிகளுக்கு அர்ப்பணித்துக் கொண்ட பொன் விழா ஆண்டு.)**



பட்ட பெண்ணின் பக்கம் நிற்பதில்லை; கணவன் பக்கமே நிற்கிறாள் என்பது தான். காரணம், தனது வாழ்க்கைக்கான பாதுகாப்புப் போய்விடுமோ என்கிற கோழைத்தனம்!

இந்து: அந்தக் கோழைத்தனத்திற்குக் காரணம், வெளியில் அவளுக்குப் பாதுகாப்பில்லை என்பதுதானே!

வைஷ்: அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் ஒருத்தி தனது தாய் வீட்டிற்கு வந்தால் கூட அவளுக்கு அங்கு சரியான வரவேற்புக் கிடைப்பதில்லை.

நிர்: தனியாகச் சம்பாதித்து வாழ முடியும் என்கிற நிலையில் இருக்கும் ஒரு பெண், அப்படித் தனியாக வாழ்ந்தால் கூட, அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அவளை ஒருவித ஏளனத்தோடுதான் பார்க்கிறார்கள்; அவள் தான் குற்றவாளி என்பது போல்தான் பார்க்கிறார்கள்...

இந்து: அது மட்டுமல்ல; அப்படித் தனியாக இருப்பவளின் வீட்டுக் கதவைத் தட்டுவதற்கு எத்தனை ஆண்கள் தயாராகவும் இருக்கிறார்கள்...! தனியாக இருக்கும் பெண் "என்றாலே, அவள் சுலபமாகத் தங்கள் இச்சைக்கு இசைந்துவிடுவாள் என்று தான் ஆண்கள் நினைக்கிறார்கள்.

நிர்: ஆண்கள் அப்படி நினைப்பது ஒரு புறமென்றால், மறுபுறம் மற்ற பெண்களே அவளுடைய நடத்தை பற்றித் தவறாகப் பேசத் தயங்குவதில்லை என்பதுதான் வேதனை! அவள் தனது ஆபீஸ் விஷய மாகப் பிற ஆண்களிடம் பேசினால் கூட மற்ற பெண்கள் அதைச் சந்தேகத்தோடு தான் பார்க்கிறார்கள்.

இந்து: கற்பு என்பது இருபாலருக்கும் சமம் என்கிற நிலை — ஒரு பெண்ணைப் பலாத்காரப்படுத்தி ஓர் ஆண் இணங்கச் செய்கிற போது அங்கே அந்தப் பெண் மட்டும் கற்பிழக்கவில்லை; அந்த ஆணும் கற்பிழக்கிறான் என்கிற நிலை வரும் போது தான் ஓரளவுக்காவது ஒரு நல்ல வழி பிறக்கும்.

நிர்: நன்றாகச் சொன்னீர்கள் இந்துமதி... ஆண்கள் பெண்களின் கற்புக்குக் கொடுக்கிற முக்கியத்துவம் மாதிரி, பெண்களும் ஆண்களின் கற்புக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். கற்பிழந்த ஆண்களைப் பெண்கள் சமுதாயமே கேவலமாகப் பார்க்க வேண்டும்; நடத்த வேண்டும். ஆக, பெண்களின் பிரச்னைகளுக்கான தீர்வு பெருமளவில் பெண்களிடமேதான் இருக்கிறது என்பதை நீங்களும் ஒப்புக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

அட்டையில்: **வைஷ்ணவி, இந்துமதி, நிர்மலா சுரேஷ்.**

வண்ணப்படமும் மற்ற படமும்: **உத்ரா**

தொகுப்பு: **'சலன்'**



# ஊழல்

ஊழல் காரர்களுக்காக, ஊழல்காரர்களால் நடத்தப்பட்டு, ஊழலை வளர்ப்பதற்கென்றே உழைக்கும் ஒரே பத்திரிகை.

ஆசிரியர்: லஞ்சாபகேசன்.
விலை: 'சம்திங்'

## புரட்சித் தலைவி மீது ஊழல் புகாரா? காளிமுத்து ஆவேச அறிக்கை!

"புரட்சித்தலைவரின் கனவுகளை எல்லாம், பால்கனியில் காட்சி தருவதன் மூலமே நனவாக்கி வரும் புரட்சித்தலைவி மீது கருணாநிதி ஊழல் குற்றம் சாட்டுவதா? இது திருநாவுக்கரசும், தமிழ்நாட்டு பாஸ்கர ராவ் பண்ருட்டி ராமச்சந்திரனும் சேர்ந்து தீட்டிய சதி தான்! நான் இவர்களை எச்சரிக்கிறேன்: கருவாடு மீனாகாது; கறந்த பால் காம்பேறாது; கொடுக்கப்பட்ட லஞ்சத்தைத் திரும்பப் பெற முடியாது! "திருபிக்கப்படாத ஊழல் நடக்கவேயில்லை" என்பது ராபின் மெய்ன் என்ற அறிஞரின் பொன்மொழி. அதனைக் கலைஞருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்!"



**போட்டி அறிவிப்பு:**

**ஊழல் செய்வதில் கில்லாடிகள்: அரசியல்வாதிகளா? அரசு அதிகாரிகளா?**

— கட்டுரைப் போட்டி

●● கடைசித் தேதி: முந்தாநாள். இதற்குப் பின் அனுப்புகிறவர்கள் கூடவே "அன்பளிப்பு" அனுப்ப வேண்டும்.

●● கட்டுரைகள் அத்தனை சிறப்பாக இருக்க வேண்டும் என்கிற அவசியமில்லை.

●● அன்பளிப்பின் சிறப்புக்கு ஏற்ப பிரைஸ்கேஸ் பரிசு!

தலையங்கம்:

## மலிவு லஞ்சத் திட்டம் தேவையா?

கள்ளச்சாராயத்தை ஒழிக்க முடியாததால் அரசாங்கம், மலிவு விலை மது பகிரங்க விற்பனையை ஆரம்பித்துள்ளது. இதைப் பார்த்துவிட்டுச் சிலர் லஞ்ச ஊழலை ஒழிக்க முடியாததால் அரசு 'மலிவு லஞ்சத் திட்டம்' கொண்டுவந்து ஒவ்வொன்றுக்கும் ரேட் நிர்ணயிக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். அரசு இப்படிப்பட்ட அசட்டுக் காரியத்தைச் செய்து அதிகாரிகள், அரசியல்வாதிகளின் வயிற்றிலடிக்காது என்று நம்புவோமாக. இந்த ஒரு துறையிலேனும் திறமைக்கு மட்டுமே முதலிடம், தகுதிக்கு மட்டுமே சிறப்பிடம் என்று இருக்கட்டும். போட்டா போட்டி மனப்பான்மை வளர்ந்து லஞ்ச ஊழல் துறையேனும் நிர்ணயித்த இலக்குகளையும் கடந்து சாதனைச் சிகரங்களைக் கைப்பற்றட்டும்!



"என்னய்யா மூஞ்சியெல்லாம் ஒரே காயம்?"

"கழுதை நிக்கிறது தெரியாம, 'கிக் பேக், கிக் பேக்'னு நண்பரோட பேசிக்கிட்டிருந்தேன்..."

# உலகளாவிய ஊழல்!

கலைஞர் தம் உடன் பிறப்புக்களுக்கு முரசொலியில் கடிதம் எழுதியுள்ளார். அக்கடிதம் வருமாறு:

உடன் பிறப்பே!

தி. மு. க. ஆட்சியில் லஞ்ச ஊழல் மலிந்து விட்டதாக எதிர்க்கட்சியினர் குற்றம் சாட்டியுள்ளனர். என்ன ஒரு வேடிக்கை!

முன்னாள் பிரதமர் இந்திரா காந்தி அம்மையார் அவர்கள் ஒருமுறை குறிப்பிட்டார். "Corruption is an universal phenomenon." அதாவது, ஊழல் என்பது உலகளாவிய விஷயம். அதைத்தான் இன்று நான் நினைவு கூர விரும்புகிறேன்.

அமெரிக்காவில் வாட்டர்கேட் ஊழல். இந்திரா காந்தி அம்மையார் காலத்திலே நகர்வாலா ஊழல், மாருதி ஊழல். எம். ஜி. ஆர். ஆட்சியின் போது கப்பல் பேர ஊழல். ராஜீவ் காலத்தில் போஃபோர்ஸ் ஊழல்...

இப்படி எத்தனை எத்தனையோ ஊழல்களை அடுக்கிக் கொண்டே போகலாம்.

உடன்பிறப்பே! உனக்கு எதற்கு இதெல்லாம் விளக்குகிறேன் தெரியுமா? உலகில் தி. மு. க. ஆட்சியில் மட்டும்தான் ஊழல் நிலவுகிறது என்பது போல எதிர்க்கட்சியினர் ஒரு மாயையை ஏற்படுத்த முயல்கிறார்கள் என்பதை உனக்குச் சுட்டிக்காட்டத்தான்.

உடன் பிறப்பே, நம் மீது அபாண்டமாய் ஊழல் புகார் கூறுபவர்களை நோக்கி, "ஊழல் புகார் கூறும் உங்கள் கரங்கள் கறைபடாத கரங்களா?" என்று திருப்பிக் கேட்போம்!"

அன்புடன்,
மு. க.



### கேள்வி? பதில்!



கேள்வி: ஊழலை ஒழிக்கவே முடியாதா?

பதில்: மூன்றாம் உலகப் போர் வரட்டும். ஊழல் என்ன, உலகமே ஒழிந்து விடும்.

### புதுக் கவிதை

தேன் எடுத்தவன்
புறங்கை நக்குவானாம்.
இங்கே —
மொத்த தேனையுமே
நக்கிக் குடித்து
விடுகிறார்களே!

"ஆபீஸ்ல பியூனுக்கும், ஆர். டி. ஓ. வுக்கும் என்ன ஒற்றுமை, பார்த்தியா! இரண்டு பேருமே சொந்தக் கார்ல ஆபீஸுக்கு வர்றாங்க!"



### வாசகர் கடிதம்:

ஓய்வுபெற்ற உயர் அதிகாரி வேங்கட சுந்தரத்தின் ஊழல் அனுபவங்கள் பற்றிய கட்டுரை சூப்பர்! என்னைப் போன்ற கத்துக்குட்டிகள் "காசு தேத்த" மிகவும் உபயோகமாய் இருக்கும் என்பதில் ஐயமில்லை.

— ஊழல் பிரியன், லஞ்சப் பேட்டை.

வாசகர் யோசனை:
**நெல்லை சுரலோன்**
தயாரிப்பு, கற்பனை:
**ஜூலி**
படங்கள்: செ.



## மாணவர் கட்டுரைப் போட்டி

### ரூ. 50 பரிசு பெறும் கட்டுரை




# ஜெயலலிதாவுக்குச் சில ஆலோசனைகள்

**யா**ருக்கும் விளங்காத முறையில் ஜெயலலிதா எடுக்கும் பல நடவடிக்கைகளினால் அவர் கட்டிக்காக்க வேண்டிய கட்சி இன்று உடைபட்டுள்ளது. அவர் அடிக்கடி தம்மைத் தாமே தனிமைச் சிறையில் அடைத்துக் கொள்கிறார். தம்முடைய இந்தப் போக்கை அவர் மாற்றிக் கொள்ள வேண்டும். தொண்டர்களுடனும், கட்சியின் மூத்த தலைவர்களுடனும் மனம் விட்டுப் பேச வேண்டும்.

அவர் கட்சியில் யாரையும் நம்புவதே கிடையாது. சமீபத்தில் திருநாவுக்கரசு, கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் உள்ளிட்ட பதினாறு பேரைக் கட்சியிலிருந்து நீக்கியிருக்கிறார். எதனால் என்பது ஜெயலலிதாவுக்கே புரியுமா, சந்தேகம். சில நாட்களுக்கு முன்புதான் கட்சியைக் கவனித்துக் கொள்ள உயர்மட்டக் குழு ஒன்றை அமைத்தார். ஆனால் சில நாட்களுக்குள்ளாகவே கட்சியில் பலரை நீக்கம் செய்து தம்மைப் புரியாத புதிராக்கிக் கொண்டார். காரணமின்றிக் கட்சியிலிருந்து நீக்கம் செய்யப்பட்டவர்களை மீண்டும் கட்சியில் சேர்த்துக் கொள்ளக் கூடச் செய்யலாம். தவறில்லை. தம்மைச் சார்ந்திருப்பவர்களிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். அவர்களிடம் பொறுப்புக்களைப் பகிர்ந்தளித்திட வேண்டும். முக்கியமான விஷயங்களைத் தவிர மற்ற விஷயங்களில் ரகசியம் காக்கக் கூடாது.

உட்கட்சித் தேர்தல்கள் நடத்துவதற்கான வேலைகள் தொடங்கி ஒரு வருடம் ஆன பின்பும் தேர்தல் நடத்தப்படவில்லை. விரைவில் அதை நடத்துவதற்கான நடவடிக்கைகளை எடுத்திட வேண்டும்.

தம் முகத்தைப் பார்த்தே மக்கள் ஓட்டுப் போடுவார்கள் என்று தமிழக மக்களை மட்டமாக எண்ணிச் செயல்படுவதை ஜெயலலிதா கைவிட வேண்டும். உடனடியாகத் தம் தொகுதியான போடிக்கு விஜயம் செய்ய வேண்டும். தொகுதி மக்களின் குறைகளை நிவர்த்தி செய்ய முயற்சி எடுக்க வேண்டும்.

**எ**ப்படியேனும் தமிழகத்தில் அ. தி. மு. க. ஆட்சியை ஏற்படுத்தி முதல்வராகி விடத் துடிக்கிறார் ஜெயலலிதா. அவர் ஆசையில் தவறு இல்லை. ஆனால் அவர் கட்சி ஒரு சிறந்த எதிர்க்கட்சியாகவே செயல்படாத நிலையில் அவர் ஆசை கடல் ஓரத்தில் கட்டும் மணல் வீடாகவே ஆகும். ஜெயலலிதா இதை உணர்ந்து தமது கட்சிக்குள் இருக்கும் பேதங்களை நீக்கி, குடுமிப்பிடிச் சண்டைகளைப் போக்கி அதை ஒரு சிறந்த எதிர்க்கட்சியாக்க வேண்டும். எதிர்க்கட்சியாக இருந்து கொண்டே மக்களுக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்ய முடியும்.

சட்டசபையில் அவருக்குப் பாதுகாப்பு இல்லை என்ற காரணத்தினால் சட்டசபைக்கு வேண்டுமானால் போகாமல் இருக்கலாம். ஆனால் சட்டசபை நடவடிக்கைகளில் தம் கருத்துக்களைத் தெளிவாக வெளியிட வகை காண வேண்டும். ஆட்சியைப் பிடிப்பது மட்டும் குறிக்கோளாக இல்லாமல் செயல்பட்டால் இவற்றையெல்லாம் செய்ய இயலும்.

தம்மால் நீக்கம் செய்யப்பட்ட திருநாவுக்கரசு முதலானோர் கட்சி அலுவலகத்தைக் கைப்பற்ற முயன்றதற்குத் தமிழக முதல்வர் தான் காரணம் என்று கூறியுள்ளார். இவ்வாறு எடுத்ததற்கெல்லாம் முதல்வர் மீது பழி சுமத்தும் தமது போக்கையும், தொட்டதற்கெல்லாம் முதல்வரின் ராஜினாமாவைக் கோரும் தமது செயலையும் மாற்றிக்

கொள்ள வேண்டும்.

பிரச்னைகள் ஏற்படும் போது தாமே ராஜினாமா செய்வது அடுத்த நாளே கட்சித் தொண்டர்களின் வேண்டுகோளுக்கிணங்கவும் ராஜீவ் காந்தியின் விருப்பத்திற்கிணங்கவும் ராஜினாமாவை வாபஸ் பெறுவது என்ற ராஜினாமா நாடகத்தை இனியேனும் அரங்கேற்றுவதில்லை என்று முடிவு செய்து கொள்ள வேண்டும்.

கட்சியை நிர்வகிக்க அவர் உடல்நிலை ஒத்துழைக்கவில்லையாயின் கட்சி நிர்வாகப் பொறுப்பை வேறு யாரிடமாவது அளிக்கலாம். தமது கருத்துக்களுக்கு இசைவாக எல்லாம் நடக்கிறதா என்று மேற்பார்வையிடுவதுடன் நிற்கலாம்.

கட்சிக்குச் சிறந்த தலைமையை அளித்து, கடலில் தத்தளிக்கும் துடுப்பில்லாத அ.தி.மு.க. படகை அவர் கரையேற்ற வேண்டும். அது அவரால் முடியும். ஆனால் செய்வாரா என்பதுதான் சந்தேகம்!

— எஸ். சிவானந்தவல்லி,
பி. லிட் (தமிழ்) முதலாமாண்டு,
அஞ்சல்வழிக் கல்வி,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
— 608 002.

## வோட்டுப் போட்ட மக்களை ஏமாற்றுவதா?

''எனக்குச் சட்டசபையில் பாதுகாப்பு இல்லை'' என்று கூறி நீங்கள் சட்டசபைக்குச் செல்லாமல், எதிர்க்கட்சித் தலைவர் பதவியையும் ராஜினாமா செய்து விட்டீர்கள். இதைத் தாங்கள் செய்திருக்கக் கூடாது. இதன் மூலம் தங்களை நம்பி வோட்டுப் போட்ட மக்களை ஏமாற்றி விட்டீர்கள். எனவே மீண்டும் தாங்கள் எதிர்க்கட்சித் தலைவராகப் பொறுப்பேற்க வேண்டும். இந்த ஆட்சி இருக்கும்வரை சட்டசபைக்குச் செல்வதில்லை என்ற தங்களது பிடிவாதப் போக்கைக் கைவிட்டு, அரசின் திட்டங்களை ஆக்கபூர்வமாக விமர்சித்து 'நடந்ததை மறப்போம், நடப்பதை நினைப்போம்' என்ற வழியில் செயல்படுங்கள்.

— எஸ். வி. ரமேஷ்,
அஞ்சல் வழிக் கல்வி,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

## இரண்டும் இல்லையெனில்...

பாராளுமன்றத் தேர்தலில் தமிழகத்தில் ஓர் இடத்தைத் தவிர அனைத்து இடங்களையும் கைப்பற்றித் தன் பெரும்பான்மை பலத்தை நிரூபித்த அ. தி. மு. க., இன்று ஜெயலலிதாவால் சீரழிந்து கொண்டிருக்கிறது. ''ஒன்று அரசியலை விட்டு விலகுங்கள்; இல்லையெனில் அரசியலிலேயே முழு மூச்சாக ஈடுபடுங்கள்; இரண்டும் இல்லையெனில் ஒரு நல்ல மனோதத்துவ மருத்துவரைப் பாருங்கள்'' — இதுவே இன்றைய ஜெயலலிதாவுக்குக் கூற முடிகிற சிறப்பான ஆலோசனை ஆகும்.

— ப. சதீஷ் குமார்,
முத்துரங்கம் கலைக் கல்லூரி,
வேலூர்.

## மீண்டும் முருங்கைமரம் ஏறினால்...

உங்கள் இயக்கத்தில் உள்ள அனுபவம் மிக்க மூத்த தலைவர்களின் ஆலோசனைகளைக் கேட்டு நடங்கள். இவருக்கு அப்பதவி வழங்கினால் நம்மை விட மக்களிடத்தில் அதிக செல்வாக்குப் பெற்று விடுவாரோ என அஞ்சித் திறமையற்ற, அனுபவமில்லா ஆட்களிடம் கட்சியின் பதவிகளை ஒப்படைக்காதீர்கள். இயக்கத்தின் வளர்ச்சி பாதிக்கப்படும். இயக்கத்தின் இளைஞர்களைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். அதே சமயத்தில் Old is Gold என்பதையும் மறவாதீர்கள்.

மாநிலங்களவையில் முன்பு சிறந்த பேச்சாளராக விளங்கிய நீங்கள் சட்டசபைக்கே செல்லாதிருப்பது வருந்தத்தக்கது. மூட்டைப்பூச்சிக்குப் பயந்து வீட்டைக் கொளுத்தக் கூடாது. மக்களின் குறைகளைச் சபையிலே எடுத்துக் கூறி அவற்றைத் தீர்க்க உதவுங்கள்.

உங்களுக்கும் மக்களுக்கும் இடையே பாலமாக இருப்பவை பத்திரிகைகளே. எனவே நிருபர்களை அவமதிக்காமல் அவர்களைச் சந்தித்து உங்களின் கருத்துக்களை, கொள்கைகளை மக்களுக்குக் கூறுங்கள்.

நாலு சுவருக்குள் இருந்து கொண்டு அரசியல் நடத்தாமல் நாள்தோறும் மக்களைச் சந்தியுங்கள்.

உங்கள் இயக்கத்தின் நிதி பலமுறை கேலிக்குரியதாக ஆகி உள்ளது. அதை ஒழுங்குபடுத்தி பலப்படுத்துங்கள்.

பொதுக்கூட்ட மேடைகளில் நீங்கள் மட்டும் உட்கார்ந்து கொண்டு மூத்த தலைவர்கள் சுற்றி நிற்பது மக்களுக்கு உங்கள் மீது உள்ள மதிப்பைக் குறைக்கும்.

அடிக்கடி கறுப்புக் கொடி காட்டியும், உண்ணாவிரதம் இருந்தும் பகட்டு அரசியல் நடத்துவதை விட்டு விட்டு, மக்களின் முன்னேற்றத்திற்குக் குரல் கொடுக்கும் உண்மைப் பிரதிநிதியாக இருங்கள்.

இதையெல்லாம் செய்வதை விட்டு மீண்டும் முருங்கை மரம் ஏறினால் மக்கள் உங்களை வேதாளம் என்றே முடிவு செய்து விடுவார்கள்.

— இரா. அருள்மொழி,
ஆதிபராசக்தி பொறியியல் கல்லூரி,
மேல்மருவத்தூர்.



# கல்கி

1990 செப்டம்பர் 30
மலர் : 49 இதழ் 9
பிரமோதூத புரட்டாசி 14



## டிக்கெட் இல்லாப் பயணிகள்!

'படிப்பது ராமாயணம்; இடிப்பது பெருமாள் கோயில்' என்பதாக வசனம். அப்படித்தான் பிரதமர் கலந்து கொண்ட பேரணிக்குக் கூட்டம் சேர்த்திருக்கிறார்கள். ஒவ்வொரு அமைச்சரையும் ஒரு திக்கு நோக்கி அனுப்பி, 'இத்தனை ஆயிரம் பேரைத் திரட்டிக் கொண்டு வர வேண்டும்' என்று இலக்கு நிர்ணயிக்கப் போக, பல்லாயிரக்கணக்கான லாரிகளும், பஸ்களும் சென்னை நோக்கிப் படையெடுத்தன. இதற்கு எவ்வளவு டீசல் செலவாயிற்று என்பதையும், எரிபொருள் சிக்கனம் கருதி மத்திய அரசு எடுத்துள்ள நடவடிக்கைகளையும் ஒப்பு நோக்கி, இதிலுள்ள முரண்பாடு கருதி, பிரதமர் பேரணியைப் பார்வையிட மறுத்திருக்க வேண்டும். இதில் தவறி விட்ட பிரதமர், அந்த அளவில் நம் மதிப்பில் தாழ்ந்து போகிறார்.

இப்படி கூட்டம் சேர்த்து எதை நிரூபிக்க முயன்றார்கள்? தேர்தல் ஏதும் சமீபிக்காத போது தி. மு. க. வுக்கு உள்ள ஆதரவைக் காட்டிக் கொள்ள அவசியம் இல்லை. பெரியார், அண்ணா, பாரதிதாசன், அம்பேத்கார் போன்றோரிடம் நம் எல்லோருக்குமே உள்ள மதிப்பு, மரியாதைக்குப் புதிய நிரூபணம் ஏதும் தேவையில்லை. பிறகு எதற்காகப் பேரணி? ''பாருங்கள், நான் சொன்னதைக் கேட்டு மண்டல் கமிஷன் அறிக்கையை நீங்கள் அமுல்படுத்தியதற்கு எவ்வளவு பேராதரவு இருக்கிறது, பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று பிரதமருக்கு உணர்த்தத்தான் இந்த ஏற்பாடு. இட ஒதுக்கீடு பிரச்னையில் வடக்கே வாங்கிய அடிக்குத் தமிழகம் வந்து ஒத்தடம் கொடுத்துக் கொண்டு திரும்பினால், அங்கே மீண்டும் பலத்த எதிர்ப்பையும் ஏன், நீக்குளியலையுமே கூட தமது வீட்டு வாசலிலேயே சந்திக்கிறார் பிரதமர்.

தேவிலாலின் விவசாயிகள் பேரணியைப் பார்த்துவிட்டு, அதற்கு இணையான செல்வாக்குப் பெறும் உத்தியாக, கருணாநிதியின் பேச்சைக் கேட்டு அவசரப்பட்டு, மண்டல் கமிஷன் அறிக்கையை அப்படியே அமுல்படுத்துவதாகக் கூறியது எவ்வளவு பெரிய தவறு என்பதைப் பிரதமர் இதற்குள் உணர்ந்திருப்பார். ஆனால் வெளியே கூறமாட்டார்! மாறாக,மண்டல் அறிக்கை எவ்வாறாயினும், இங்கும் அங்கும், இதிலும் அதிலும் விதிவிலக்குகள் உண்டு என்று படிப்படியாகப் பட்டியலிட்டு வருகிறார். அதுவும் போதவில்லை. எதிர்ப்பும் வன்முறையும் வளரத்தான் செய்கின்றன. இப்போது பி. ஜே. பி.யைப் பார்த்து, 'எனக்கு ஆதரவு தரவில்லை எனில் ராஜீவ் ஆட்சிதான் வரும் ஜாக்கிரதை!' என்று கிட்டத்தட்ட பிளாக்மெயில் செய்யும் நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டார் வி. பி. சிங். ஐயோ, பாவம்!



கடற்கரைக் கூட்டத்தில் முற்படுத்தப்பட்ட சமுதாயத்தினரை 'டிக்கெட் இல்லாப் பயணிகள்' என்று கலைஞர் வர்ணிக்கப் போக, உடன்பிறப்புக்கள், 'நாமும்தான் டிக்கெட் இல்லாமல் பயணம் செய்வோமே' என்று தீர்மானித்து, ஸ்பெஷல் ரயிலில் ஏறினார்கள். அதனைக் கண்ட இடத்தில் சங்கிலி இழுத்து நிறுத்தினார்கள். கார்டு டிரைவருடன் சண்டை போட்டு, உணவு ஸ்டால்களைச் சூறையாடி அமர்க்களப்படுத்தி விட்டார்கள். திருநெல்வேலி வரை போக வேண்டிய ரயில், திருச்சியிலேயே ஸ்பெஷல் பயணத்தை முடித்துக் கொண்டு சாதனை புரிந்தது!

மைனாரிட்டி அரசு என்ற அரை டிக்கெட்டில் ஆட்சி பீடத்தை முழுமையாக ஆக்கிரமித்து இருக்கும் வி. பி. சிங்கைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, சட்டமன்றத் தேர்தலில் வாங்கிய டிக்கெட்டை நாடாளுமன்றத் தேர்தலின் போது தொலைத்து விட்டு நிற்கும் கருணாநிதி, முற்படுத்தப்பட்ட சமுதாயத்தினரை 'டிக்கெட் இல்லாப் பயணிகள்' என்று கூறி அவமானப்படுத்தியிருக்கிறார். இது ஜனநாயக நாடு என்பதையும், அனைவருக்கும் சமவாய்ப்பு என்பதுதான் இதன் லட்சியம் என்பதையும் கருணாநிதி புரிந்து கொண்டிருந்தால், பிற்படுத்தப்பட்ட சமுதாயச் சகோதரர்களுக்காக முற்படுத்தப்பட்ட சமுதாயத்தினர் இன்று அளப்பரிய தியாகம் புரிந்து கொண்டிருப்பதை உணர்ந்து, அதற்காக அவர்களைப் பாராட்டி, நன்றி கூறியும் இருப்பார். ஆனால் அத்தகைய பெருந்தன்மை அவரிடம் இல்லை. காரணமின்றி ஏசத்தான் அவருக்குத் தெரிகிறது.

அனைவருக்கும் சமவாய்ப்பு என்பதே ஜனநாயகத்தின் லட்சியமாக இருக்க முடியும். அந்த இலக்கை எட்டுவதற்குப் பிற்படுத்தப்பட்டவருக்கு இட ஒதுக்கீடு செய்து கொடுத்தால் மட்டும் போதாது. இட ஒதுக்கீட்டுக்கு ஒரு கால வரம்பு நிர்ணயித்து, அந்த எல்லையை எட்டுவதற்கு முன், வாழ்க்கைக்குப் பயனுள்ள கல்வியைப் பிற்படுத்தப்பட்டவர் பெற வாய்ப்பும் வசதியும் அளித்து, அவர்களிடம் தன்னம்பிக்கையை வளர்க்க வேண்டும். இதுபற்றி எந்த ஓர் அரசியல்வாதியும் வாய் திறப்பதில்லை, முயற்சி எடுப்பதும் இல்லை. இட ஒதுக்கீடு பற்றி மட்டுமே வீராவேசத்துடன் பேசுகிறார்கள்; செயல்படுகிறார்கள். இந்தப் போக்கு, பிற்படுத்தப்பட்டவரை என்றென்றும் பிற்படுத்தப்பட்டவராகவே வைத்திருக்கும் அரசியல் ஆதாயச் சூழ்ச்சியேயன்றி, வேறில்லை.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



CROWN
CROWN




CROWN

டாக்டர் பதில்கள்:

# குழந்தைகள் மண் தின்பது ஏன்?

● கா. க. வே. ரோகிணி,
கோவை — 16.

● வெல்டிங் செய்பவர்களுக்குத் தொடர்ந்து 2, 3 நாட்கள் கண் எரிச்சலும், முகத்திலும், உடலிலும் தோல் உரிவதும் ஏன்? வெல்டிங் வேலை செய்துவிட்டு இந்தப் பாதிப்புக்கு உள்ளாகும் தொழிலாளி, இந்த நிலையில் தன் மனைவியுடன் தாம்பத்திய உறவு கொண்டால், பிறக்கும் குழந்தைக்குக் கண் தெரியாது போகும் அபாயம் உள்ளது என்ற கூற்று மருத்துவ ரீதியாக உண்மையா? பாதுகாப்புக் கவசம் தவிர, இதற்கு முன் யோசனை நடவடிக்கை என்ன? வெல்டிங் பாதிப்புக்கு உள்ளான நபர் வெங்காயச் சாற்றை ஊற்றியோ, வாழைப்பழத்தை வைத்துக் கட்டிக்கொண்டோ படுக்கும் முறைகள் தவறானவைதானா?

டாக்டர் ஆர். ஜே. ஞானாதிக்கம்,
கண் மருத்துவர், சென்னை — 18.

வெல்டிங் செய்கிறவருக்கு முக்கியமாகப் பாதுகாப்புக் கண்ணாடி தேவை. இதை அணியாத போது கண் சிவந்து, எரிச்சல் உண்டாகிறது. காரணம், வெல்டிங்கின் போது வெளிப்படும் இன்ஃப்ரா ரெட், அல்ட்ரா வயலெட் கதிர்கள்தான். மேற்படி கதிர்களின் பாதிப்புடன், உஷ்ணமும் சேர்ந்து கொள்ளும்போதுதான் முகத்திலும் உடலிலும் தோல் உரிகிறது. ஆனால் இது கூட வெகு அரிதாகத்தான் நிகழும். தாம்பத்திய உறவுக்கும், இதற்கும் சம்பந்தமே கிடையாது. ஏனென்றால், மேற்படி கதிர்கள் கண்களைத்தான் பாதிக்கின்றன. உடலை அல்ல. இவை 'ஜீன்'களை பாதிப்பதில்லை என்பதால், இவருக்குப் பிறக்கும் குழந்தைக்குக் கண் தெரியாது போகும் என்ற பேச்சுக்கே இடமில்லை. வெங்காயச் சாற்றை ஊற்றிக் கொள்ளுவதும் மருத்துவரீதியாகப் பலன் அளிக்காது. இம் மாதிரி முறைகள் தேவையும் இல்லை. அல்ட்ரா வயலெட் கதிர்களை எதிர்கொள்ளும் திறன் கொண்ட 'போட்டோ—கிரே' கண்ணாடியைப் பாதுகாப்புக்கு அணிவது நல்லது மட்டும் அல்ல; அவசியமானதும் கூட.

● எஸ். ராமகிருஷ்ணன்,
சென்னை — 33.

● குழந்தைகள் மண் தின்பதற்கு என்ன காரணம்? ஏதேனும் விசேஷ காரணங்கள் உண்டா? தடுப்பது எப்படி?

டாக்டர் லலிதா ஞானகிராமன்,
சென்னை காளியப்பா மருத்துவ மனை, சென்னை — 18:




இதற்கு 'பைகா' என்று பெயர். சாதாரணமாக, குழந்தையின் முதல் மூன்று வருடங்களில் இந்தப் 'பசி' உண்டாகும். மண், சாக்பவுடர், பெயிண்ட் என்று எதைக் கண்டாலும் குழந்தை சாப்பிட்டு விடும். இதற்குக் காரணம் இரும்பு போன்ற தாதுச் சத்தும், வைட்டமின், கால்சியம் போன்றவற்றின் குறைபாடும்தான். இதுவே உடலில் கொக்கிப் புழுக்கள் தோன்றவும், பிறகு வழி வகுக்கும்.

கோபாவேசமான குணம், ஆவேசத்தோடு எதிர்க்கும் தன்மை, தலையை முட்டிக் கொள்கிற சுபாவம், நகங்களைக் கடித்துத் துப்பும் குணம் எல்லாம் கூட 'பைகா'வின் விளைவாகவே குழந்தைகளிடம் உண்டாகின்றன.

(தவழும் குழந்தைகளுக்கு, கைக்கு எட்டியதை வாயில் போட்டுச் சுவைப்பது ஒரு புதிய அனுபவத்தை உணர்வதற்காகவும் இருக்கும். இது பைகா அல்ல.)

கோபாவேசமான குணாதிசயங்களைப் பொறுத்தவரை, தகுந்த பராமரிப்பு, போதிப்பு மூலம் திருத்தலாம். புழுக்களால் உண்டாகும் உபாதையைத் தகுந்த மருத்துவத்தின் மூலமும், மருந்துகள் மூலமும் குணப்படுத்தலாம். உடலில் இரும்புச் சத்துக் குறைவுக்கும், தேவையான மருந்துகள் கொடுத்துச் சரிப்படுத்த முடியும்.

தொகுப்பு: எஸ். வி. என்.

# தேவேந்திரா சாரீஸ்

**மிக மிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது**

H.O.27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை–3. போன்– 583 213
கிளை ஷோ–ரூம் கடை எண்.7, ராம்ஸ் பஜார் (பனகல் பார்க் எதிரில்)
தியாகராய நகர், சென்னை–17. போன்–443367

## தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்

• காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38 W.E.A. அஜமல்கான் ரோடு, கரோல்பாக், புதுடில்லி–110 005, போன்–581050, 561786 • மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41, சரஸ்வதி மார்க், W.E.A. கரோல் பாக், புதுடில்லி. –110 005 • காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ் (சவுத் என்டு) 9ஏ/40 W.E.A. கரோல் பாக், புதுடில்லி. போன்–5723981 • பங்கஜம் சுந்தரராஜன், C6/A.D.D.A. Flats, முனிர்கா, புதுடெல்லி–67. • நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்–19. • சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7, பிவந்திவாலா பில்டிங், எல்.என்.ரோடு, மாதுங்கா, பம்பாய்–400019. • லதா கிருஷ்ணன், பிளாட் நெ.30, காமதேனு கோ.ஆப்.வெல்டம் சாகர், செம்பூர், பம்பாய்–89 (கிளாஸ் பாக்டரி அருகில்). • ஜெயஸ்ரீ, 3–ஏ, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா–26. • திருமதி. டி.எஸ்.சகுந்தலா சீனிவாசன், 18/1–ஏ, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர். போன்–224357, 96/1, கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து), பெங்களூர்–560003. • திருமதி. துர்க்கம்பாள், 32, சேஷபுரம், தென்னூர், திருச்சி– 620017. • திரு. எஸ்.சேதுராமன், 50/பி, பாணாதுரை தெற்கு வீதி, கும்பகோணம். போன்–20972. • திருமதி. எஸ்.லட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம்–1, (ரயில்வே ஸ்டேஷன் அருகில்). • ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, செங்குப்தா தெரு, கோயமுத்தூர்–9. • ஸ்ரீமுருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர்.எஸ்.புரம், கோவை–2. • மஹாராஜா சில்க்ஸ், 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி–1. போன்–4191. • மகாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங் (உள் புறம்), 175/11, மேல வீதி, சிதம்பரம். • ஹேமாவதி ஏஜென்சீஸ், 2711, நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர். • பாகீரதி மூர்த்தி, 100, ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. • எஸ். சுந்தரம், 9, சாஸ்தான் கோயில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில்–2. • திருமதி. கே. சீதாலட்சுமி, 41, 4–வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை–28. போன்–73244. • திருமதி. சாவித்திரி பாலசுப்பிரமணியம், 3, 7–வது தெரு, நங்கநல்லூர், சென்னை–61 (பிள்ளையார் கோயில் அருகில்). போன்–433737. • சரோஜா கிருஷ்ணமூர்த்தி, ஏ.பி.1186, 4வது தெரு, தென்றல் காலனி, (P.T.C. டிப்போ எதிரில்) அண்ணா நகர், சென்னை–600040. • பாலாஜி கிளாத் சென்டர், 22–ஏ, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை–45. • திருமதி. கலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை–44. • எஸ்.பொன்னப்பன், 8.3.283, 2–வது பஜார், செகந்திராபாத் (ஆ.பி.). போன்–59562. • ராணி சாரீஸ், ராணி வி.சுந்தர்ராவ், 13, மஹால் 4–வது தெரு (திருமலை நாயகர் மஹால் பின்புறம்), மதுரை – 625 001. போன்–26295, • ஆர்.கிருஷ்ணமூர்த்தி, பெரிய கண்ணாரத் தெரு, மயிலாடுதுறை. • திருமதி.கமலா நாகஸ்வாமி, 40.ஸரஸ்வதி நகர், கடலூர். பிரேமா குருராஜன், 100 சன்னதி தெரு, பாப்பாரபட்டி, தர்மபுரி தாலுகா – 636 809.

**குறிப்பு – மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.**



* வண்ணப்படம்: தம்பையா.

# இதோ ஒரு பாராட்டு!

**அரசாங்கத்தின் குறைகளை எடுத்துக் காட்டுவதோடு, பாராட்டுவதற்கு வாய்ப்புக் கிடைத்தால் வாழ்த்துவதற்குத் தயங்க மாட்டோம் என்பதற்கு இக்கட்டுரை ஓர் உதாரணம்...**

சமீபத்தில் சுவீடன் நாட்டிலிருந்து யுனிசெஃப் குழு ஒன்று இந்தியாவுக்கு வந்தது. தீவிர சுகாதாரத் திட்டத்தை, தமிழகம் மட்டும்தான் மிகச் சிறப்பாக நடைமுறைப்படுத்தி வெற்றி கண்டிருக்கிறது என்றது குழு. இதைச் சொன்னது, பெரியார் மாவட்டத்தைச் சுற்றிப் பார்த்த பிறகு.

ஈரோட்டில் மாவட்ட ஆட்சித் தலைவர் வி. கே. சுப்புராஜு அவர்களைச் சந்தித்த போது, அவர் சொன்னார்: ''எங்கள் மாவட்டம் வளர்ச்சிப் பணிகளில் தொடர்ந்து தீவிரமாகச் செயல்படும் மாவட்டம். இந்த மாவட்டத்து மக்கள் அமைதியானவர்கள். அதிகாரிகளோ மிகுந்த சுறுசுறுப்புடன் ஒத்துழைப்பவர்கள். 'தீவிர சுகாதாரத் திட்டம்' இங்கே வெற்றிகரமாகச் செயல்படுத்தப்படுவதாகக் குறிப்பிடப்படுவதற்கு அதுதான் காரணம்.''

அது என்ன, தீவிர சுகாதாரத் திட்டம்?

மஞ்சள் காமாலை, சீதபேதி, இளம்பிள்ளை வாதம், குடற்புழு நோய்கள் என்று வகை வகையான நோய்கள் பரவக் காரணம் மனிதக் கழிவுகள் திறந்த வெளியில் கழிக்கப்படுவதால்தான் பரவுகின்றன. இதை மக்களிடம் எடுத்துச் சொல்லி, மத்திய — மாநில அரசுகள் அளிக்கும் மானியம் 1280 ரூபாயுடன், வீட்டுச் சொந்தக்காரர் பங்காக 320 ரூபாய் சேர்த்து, 1600 ரூபாயில் கழிப்பறைகள் கட்டப்படுகின்றன.

கொடுமுடி ஊராட்சி ஒன்றியத்தில் உள்ள பாசூர் பேரூராட்சிக்குப் போனோம். பல வீடுகளில் இந்த மானியத்தைப் பயன்படுத்தி நவீன கழிப்பறைகள் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். ''சென்ற வருடம் பத்தாயிரம் வீடுகளில் கட்டிக் கொடுத்தோம். இந்த வருடம் பதினைந்தாயிரம் வீடுகளில் கட்டவிருக்கிறோம். எல்லோருமே இந்த அடிப்படைச் சுகாதாரத்தை உணர்ந்து, 'எங்களுக்கும் கட்டிக் கொடுங்கள்' என்கிறார்கள்! ஐந்து வருடங்களில் மீதியையும் கட்டி விடுவோம்!'' என்றார் பழனியப்பன் என்ற அதிகாரி.



● சுகாதாரத்தைக் காக்கக் கழிப்பிடம்...

மாவட்டம் முழுவதும் சுற்றிப் பார்த்தோம்.

●● பள்ளிக் கூரை இடிந்து விழுந்து மாணவர் சாவு; மரத்தடிப் பள்ளி வகுப்புகள் — இவை சில கிராமத்துப் பள்ளிக்கூடங்களின் நிலைமையை எடுத்துச் சொல்லும் செய்திகள். ஜவஹர் வேலை வாய்ப்புத் திட்டத்தின் மூலம் பெரியார் மாவட்டத்தில் இந்த வருடம் 28 லட்ச ரூபாய் செலவில் இருபத்தியொரு பள்ளிக் கட்டடங்கள் கட்டப்படுகின்றன என்ற தகவல், சபாஷ் சொல்ல வைத்தது.

●● கீரமடை என்னும் ஒரு கிராமம். இங்கே, பிரம்மாண்டமான பாசனக் கிணறு ஒன்றை வெட்டியிருக்கிறார்கள். கிணற்றுக்குப் பெயரும் உண்டு: 'ஜீவன் தாரா'! ஆதி திராவிடர், ஆதி திராவிடப் பழங்குடியினருக்கு, அரசு சுமார் 20,000 ரூபாய் மானியம் கொடுத்து வெட்டிக் கொடுத்திருக்கிற கிணறு. இதனால் பாசன வசதி கூடுவதுடன், விவசாயிகளின் வருட வருமானமும் கூடுகிறது. இது மாதிரி சென்ற ஆண்டு 170 கிணறுகளும், இந்த ஆண்டு 100 கிணறுகளும் வெட்டப்பட்டுள்ளதாக ஒரு புள்ளி விவரம் தந்தார்கள்.

●● வெள்ளோடு கிராமத்தில், மகளிர் மற்றும் குழந்தைகள் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ், பெண்களுக்குச் சுய வேலை வாய்ப்பு அளிப்பதற்காக, தையல் இயந்திரங்கள் வாங்கிக் கொடுத்து, ரெடிமேட் ஆடைகள் தயாரிக்கிறார்கள். இவற்றுக்கு விற்பனை நன்றாகவே இருக்கிறதாம். குழந்தைகள் விளையாடிப் பொழுதைக் கழிக்க ஒரு 'கிரஷ்' இருக்கிறது. எதிர்ப்புறத்தில், சாம்பார் பொடி தயாரிப்புக் கூடம். மாவட்டத்திலுள்ள எல்லாச் சத்துணவுக் கூடங்களுக்கும் தேவையான சாம்பார்ப் பொடியை, இங்குதான் தயாரிக்கிறார்கள். விலை, வெளிமார்க்கெட் விலையை விடக் குறைவுதான்.

●● சென்னி மலையிலுள்ள 'சென்டெக்ஸ்' நைஜ்ரிய மக்களுக்கான துணி வகைகள்



* மாவட்ட ஆட்சித் தலைவர் வி. கே. சுப்புராஜு



* மகளிருக்குத் தையல் பயிற்சி...

தயாரிக்கிறது. அத்தனையும் ஏற்றுமதி! கண்ணைப் பறிக்கிற டிசைன்கள். இந்திய சணல் ஆராய்ச்சிக்கழக வேண்டுகோள்படி, சணல் நாரையும் கைத்தறி போலவே பல வண்ணங்களில் நெய்கிறார்கள்! (சணல் வந்து கைத்தறியை அடித்துக் கொண்டு போய் விடுமோ? ''போய் விடாது'' என்கிறார் ஸ்பெஷல் ஆபீசர்.) இது ஒருபுறமென்றால் மறுபுறம், 'சென்டெக்ஸ்' நிறுவனத்திலிருந்து வெளியேறும் சாயக் கழிவுநீர், பாதையின் நடுவே பாய்ந்து, அந்த வழியாக உள்ள குடிநீர்க் கிணறுகள், விவசாயக் கிணறுகள், ஆழ்துளைக் கிணறுகள் என்று எல்லாவற்றிலும் கலந்து மாசுபடுத்திக் கொண்டிருந்தது. அரசு மான்யம் ஐம்பது சதவிகிதமும், சென்டெக்ஸ் ஐம்பது சதவிகிதமும் போட்டு நாலு லட்ச ரூபாய்ச் செலவில் கழிவுநீர் வாய்க்கால் கட்டப்பட்டிருக்கிறது. ''இந்தக் கழிவுநீரை எங்கே கொண்டு போவீர்கள்?'' என்று கேட்டபோது, ''தற்போதைக்கு மக்களின் கோரிக்கையை ஏற்று, இங்கேயுள்ள தண்ணீரை மாசுபடுத்தாமல் வெளியே கொண்டு செல்லுகிறோம். இப்போதைக்கு அவ்வளவுதான் சொல்ல முடியும்!'' என்றார்கள். இந்தத் தண்ணீர் கடைசியில் எங்கு போய்க் கலக்கும் என்பது பயங்கர சஸ்பென்ஸாகவே இருக்கிறது!

●● ஊராட்சி ஒன்றியங்களுக்கு வருமானம் கிடைக்க, இப்போதெல்லாம் புதுப் புது வழிகளைக் கையாளுகிறார்கள். வருமானத்துக்கு வருமானம்; வேலை வாய்ப்புக்கு வேலை வாய்ப்பு. பவானி ஊராட்சி ஒன்றியத்தில், இரும்புக் கிராதிகள், சட்டங்கள், ஜன்னல்கள் எல்லாம் செய்யப்படுவதுடன், இளைஞர்களுக்குப் பயிற்சியும் அளிக்கிறார்கள். சென்ற வருடம் மட்டும் எட்டு லட்ச ரூபாய்க்கு வியாபாரம் செய்து, ஐம்பதாயிரம் ரூபாய் லாபம் ஈட்டியிருக்கிறார்கள். இந்த வருட இலக்கு, இருபது லட்ச ரூபாய். பெருந்துறை பஸ் ஸ்டாண்டை மிக நவீன வசதிகளுடன் கட்டியிருக்கிறது பேரூராட்சி. கடைகள் என்ன, உணவு விடுதி என்ன... வருட வருமானம் இதிலிருந்து மட்டும் ஆறு லட்ச ரூபாய் வருமாம்.

●● ஐம்பை கிராமத்து மக்களுக்கு சபாஷ் போட வேண்டும் — எத்தனை எத்தனை வீடுகளில் சாண எரிவாயுக் கலன்கள்! மாணிக்கம் என்ற விவசாயியின் வீட்டில், அடுப்பு எரிக்க மட்டுமல்ல, தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்ச, கரும்பு பிழிய, விளக்கு எரிய என்று பலவகைகளில் பயன்படுத்தி ஐம்பது சதவிகித பணத்தை மிச்சம் பிடித்திருக்கிறார்!

●● கொமாரபாளையம் நஞ்சப்ப செட்டிப் புதூரில் ஆதி திராவிடர் குடியிருப்புக்கான வீடுகள் முன்பு போல ஒதுக்குப்புறத்தில் கட்டப்படாமல் பிற சாதியினரின் வீடுகளுக்கு அருகேயே கட்டப்பட்டிருக்கின்றன. ''பிற சாதியினரிடமிருந்து இதற்கு எதிர்ப்பு ஏதும் இல்லை'' என்றார்கள். புகையில்லா அடுப்பு (சூளா) எல்லா வீடுகளுக்கும் கொடுக்கப்பட்டிருப்பதால், புகைக் கறை படியும் வாய்ப்பு இல்லை.

●● தண்ணீர்ப் பிரச்னை எந்த நல்ல காரியத்தையும், முன்னேற்றப் பணிகளையும் கறுப்புப் பொட்டு வைத்துப் பாழடித்து விடும் என்பதற்கு இரண்டு நிகழ்ச்சிகளைக் குறிப்பிட வேண்டும்:

''அங்கே எல்லாம் குழாய் இருக்கிறது. தண்ணீர் வருகிறது. நவீனக் கழிப்பறைகள் கட்டிக் கொடுக்கிறார்கள். எங்கள் தெருவில் சுமார் நூறு வீடுகள் இருக்கின்றன. குழாயும் இல்லை. தண்ணீரும் இல்லை!'' என்று செங்கோடன்பாளையத்தில் நான்கு கிராமவாசிகள் சொன்னார்கள்.

அந்தியூர் அருகே உள்ள புதுப்பாளையத்தில் 88 அரிஜனக் குடியிருப்புகளிலும் நவீன கழிப்பறைகள் கட்டிச் சாதனை புரிந்திருக்கிறார்கள். ஆனால் இரண்டு நாளாகிறதாம் தண்ணீரைப் பார்த்து. ஒரு குடம் தண்ணீர் ஐம்பது பைசா. அதுவும் கூடச் சரியாகக் கிடைப்பதில்லையாம். அப்புறம் நவீனக் கழிப்பிடங்கள் கட்டிச் சுகாதாரப் பாதுகாப்பை அங்கங்கே கொடுப்பது என்ன பலனை அளிக்கும்? 'குறைகளையும் சொல்லுங்கள்' என்று மாவட்ட ஆட்சித் தலைவர் சுப்புராஜு சொன்னதால், இங்கே நமக்குப் பட்ட குறைகளையும் சொல்லி விட்டோம்!

— சாருகேசி

இருபத்து மூன்றாம் தேதி காலை, ஒன்பது மணி. உடம்பை வருடும் குளிருடன் பெங்களூர் நகரம் மெல்ல இயங்க ஆரம்பித்திருந்தது.

க்ரைம் இன்ஸ்பெக்டர் ரங்கநாத் தன் அலுவலக அறையில் அன்றைய பேப்பர் படித்துக் கொண்டிருந்தார்.

வாசலில் நிழலாடவே நிமிர்ந்து பார்த்தார். உள்ளே வந்த ஒரு நாகரிகமான இளைஞன், முகத்தில் ஏராளமான சோகத்துடன், "இன்ஸ்பெக்டர், ஐ யாம் பாஸ்கர். நேற்று மாலையிலிருந்து என் மனைவியைக் காணவில்லை. நீங்கள்தான் எப்படியாவது அவளைக் கண்டு பிடித்துத் தர வேண்டும்." —குரல் உடையச் சொன்னான்.

இன்ஸ்பெக்டர் ரங்கநாத் சுறுசுறுப்பானார்.

"மிஸ்டர் பாஸ்கர், உட்கார்ந்து, அமைதியா, எல்லாத்தையும் விவரமாச் சொல்லுங்க."

"சார், நேற்று நான் ஆபீஸ் முடிந்து ஏழரை மணிக்கு வீட்டுக்கு வந்தேன். வீடு பூட்டியிருந்தது. என்னிடமிருந்த டூப்ளிகேட் சாவியின் உதவியால் உள்ளே சென்றேன்... என் மனைவி வீட்டில் இல்லாததை நான் இயல்பாக எடுத்துக் கொண்டேன். சினிமா போயிருக்கலாம் அல்லது தெரிந்தவர்கள் வீட்டிற்குச் சென்றிருக்கலாம் என நினைத்தேன். ராத்திரி முழுக்கத் தூங்காது காத்திருந்தேன் இன்ஸ்பெக்டர். அவள் வரவில்லை.... இன்றுகாலை ஆபீஸுக்கு ஃபோன் பண்ணி லீவு சொல்லிவிட்டு நேராக உங்களிடம் வந்திருக்கிறேன்... எனக்கு பயமா இருக்கு இன்ஸ்பெக்டர்."

"எங்கு வேலை செய்யறீங்க?"

"காதம்பரி இன்டஸ்ட்ரீஸ் ஜெனரல் மானேஜர்."

"உங்க மனைவியின் பெயர்?"

"வித்யா."

"வயது?"

"இருபத்தேழு."

"ஓகே, ஒரு கம்ப்ளெயின்ட் எழுதிக் குடுங்க."

பாஸ்கர் எழுதிக் கொடுத்தவுடன், இன்ஸ்பெக்டர் தொப்பியை அணிந்து கொண்டார். எழுந்து நின்று பெல்டை சரி செய்து கொண்டார்.

"வாங்க பாஸ்கர், உங்க வீட்டுக்குப் போகலாம்."

வீட்டின் முன்பு விதவிதமான பூஞ்செடிகள் நேர்த்தியாக அடுக்கப்பட்டிருந்தன. பக்கவாட்டில் பெரியதாக கார் காரேஜ் இருந்தது. சுற்றிலும் தோட்டம். உள்ளே மூன்று பெட்ரூம்களுடன் வீடு பெரியதாக இருந்தது.

"பாஸ்கர் உங்க மனைவியின் சொந்த ஊர் எது?"

"மெட்ராஸ்?"

"ஒருவேளை மெட்ராஸ் போயிருக்கலாமே......"

"இல்ல சார், இன்னிக்குக் காலைல எஸ்.டி.டி. போட்டு அவள் வீட்டிற்குத் தற்செயலாகப் பேசுவது போல் பேசினேன். அவள் மெட்ராஸ் செல்லவில்லை என்பதை உறுதி செய்து கொண்ட பின்தான் உங்களிடம் வந்தேன்.... அவள் வீட்டிற்கு இன்னும் விஷயம் தெரியாது."

**எஸ். கண்ணன்**

"உங்களுக்குள்ள சமீபத்தில் பெரிய சண்டை கோபம் ஏதாவது..."

"இல்லை இன்ஸ்பெக்டர், அப்படி எதுவுமில்லை."

இன்ஸ்பெக்டர் ஹாலில் இருந்த தொலைபேசியை எடுத்து, கன்ட்ரோலுடன் தொடர்பு கொண்டு, வித்யாவைப் பற்றிச் சொல்லித் தேடச் சொன்னார்.

பாஸ்கரிடமிருந்து அவனது விசிட்டிங் கார்டையும், வித்யாவின் சமீபத்திய புகைப்படம் ஒன்றையும் கேட்டு வாங்கிக் கொண்டார்.

கிளம்புமுன், "பாஸ்கர், கவலைப் படாதீங்க. நாங்க எப்படியும் வித்யாவைக் கண்டு பிடித்துவிடுவோம்... தேவைப் பட்டால் உங்களை காண்ட்டாக்ட் பண்றேன்" என்றார்.

"சார், நான் ஆபீஸ் விஷயமாக இன்று மாலை ஐந்து மணி ப்ளைட்டில் பாம்பே செல்ல வேண்டும், நாளை மாலை திரும்பி விடுவேன்..." அனுமதி கேட்கும் பாவனையில் சொன்னான் பாஸ்கர்.

ஒரு நிமிடம் யோசித்த இன்ஸ்பெக்டர், நாளைதான் வந்துவிடுகிறானே என்கிற நினைப்பில் "நோ ப்ராப்ளம், போயிட்டு வாங்க" என்றார்.

பாஸ்கர் உடன்வர வெளியே வந்தார். "பாஸ்கர், உங்க காரில் ஸ்டேஷன் வரை ஒரு ட்ராப் வாங்கிக்கறேன்!"

"ஓ, ஷ்யூர்."

இன்ஸ்பெக்டர் காரில் ஏறிக்கொள்ள, பாஸ்கர் கதவைச் சாத்தினான்.

கார் கிளம்பியதும் இன்ஸ்பெக்டர் டிரைவரை நோட்டம் விட்டார்.

"உன் பேரென்னப்பா?"

"ரமேஷ் சார்."



**"இந்த ஆபீஸ்ல லஞ்சம் தலைவிரித்து ஆடுது போலிருக்கு!"**

**"எப்படிச் சொல்றீங்க?"**

**"பாருங்களேன், மேஜை ஆடுதுங்கற துக்காக, மேஜை காலுக்கடியில் நூறு ரூபாய் நோட்டை மடிச்சுச் செருகி இருக்காங்களே!"**

**— எஸ். முகம்மது யூசுப்.**

"ரமேஷ், இந்தக் கார் பாஸ்கரின் சொந்தக் காரா?"

"இல்ல சார், கம்பெனி கார்."

"நீதான் அவருக்கு டிரைவரா?"

"ஆமா சார்."

"எத்தனை வருஷமா அவருக்குக் கார் ஓட்டறே?"

"ரெண்டு வருஷமா சார்."

"லாக் புக்கெல்லாம் மெயின்டெய்ன் பண்றதுண்டா?"

"ஆமா சார்."

"நேத்து சாயங்காலம் என்ன ட்யூட்டி உனக்கு?"

"ஆபீஸ்லேர்ந்து மிஸ்டர் பாஸ்கரை ஏழுரை மணி வாக்கில் அவர் வீட்டில் ட்ராப் செய்துவிட்டு, க்ளோஸிங் கிலோ மீட்டர் ரீடிங் எழுதி அவரிடம் கையெழுத்து வாங்கியதும் கார் சாவியைக் கொடுத்துட்டு நான் என் வீட்டுக்குப் போயிட்டேன் சார்."

"இன்னிக்குக் காலைல நீதானே வண்டிய எடுத்தே?"

"ஆமா சார்."

"வண்டி எடுக்கும் போது ஓப்பனிங் கிலோ மீட்டர் ரீடிங் எழுதுவேதான?"

"ஆமா சார். எழுதினேன்."

"லாக் புக்கை எடு பார்க்கலாம்."

டாஷ்போர்டைத் திறந்து எடுத்து இன்ஸ்பெக்டரிடம் கொடுத்தான். இன்ஸ்பெக்டர் புரட்டினார். நேற்று க்ளோஸிங் கிலோ மீட்டர் 20018. இன்று ஓப்பனிங்கில் 20026 என்று இருந்தது. டிரைவர் இல்லாமல் வண்டி எட்டு கிலோமீட்டர் ஓடியிருப்பதைப் புரிந்து கொண்டார்.

"பாஸ்கருக்குக் கார் ஓட்டத் தெரியுமா?"

"தெரியும் சார். ஆனா எப்பவாச்சும் தான் ஓட்டுவார்."

ஸ்டேஷனில் இறங்கிக் கொண்டார்.

உடனே தொலைபேசியில் பாஸ்கருடன் தொடர்பு கொண்டார். "பாஸ்கர் உங்களுக்கு கார் ஓட்டத் தெரியுமா?"

"தெரியும் சார். ஆனா டிரைவர் இருக்கறதுனால அக்கேஷனலா ஓட்டுவேன்."

"நேத்து ராத்திரி உங்க கார்ல எங்கே போனீங்க?"

"நேத்தா... ராத்திரி எங்கேயுமே போகல சார், என் மனைவிக்காக வீட்டிலேயே காத்திருந்தேன்."

"அப்ப வேற யாருக்காவது கார் குடுத்தீங்களா?"

"இல்ல, யாருக்கும் தரல்ல."

"ஆல்ரைட் பாஸ்கர், தேவைப்பட்டா மறுபடியும் உங்களைக் காண்ட்டாக்ட் பண்றேன்."

இன்ஸ்பெக்டருக்கு பாஸ்கரின் மீது முதன் முதலாகச் சந்தேகம் ஏற்பட்டது.

தமது உதவியாளரைக் கூப்பிட்டு, காதம்பரி இன்டஸ்ரீஸ் சென்று பாஸ்கரைப் பற்றிய விவரங்களை ரகசியமாகச் சேகரிக்கச் சொன்னார்.

கன்ட்ரோலுடன் தொடர்பு கொண்டு, வித்யாவைப் பற்றி ஏதாவது தெரிந்ததா என்று விசாரித்தார்.

மதியம் ரயில்வே ஸ்டேஷன் சென்று, முந்தைய தினம் புறப்பட்டுச் சென்ற அனைத்து ரயில்களின் ரிசர்வேஷன் சார்ட்களைப் பார்த்து உதட்டைப் பிதுக்கினார்.

பெங்களூர் ஏர்போர்ட்டில் சார்ட்டைப் பார்த்தபோது, வித்யா பாஸ்கரின் பெயர் முதல் நாள் — அதாவது 22 ஆம் தேதி இரவு, 'IC 510 இரவு எட்டு மணி' என்று மெட்ராஸ் ப்ளைட்டில் இருந்தது.

ஏர்போர்ட் டியூட்டி ஆபீஸரிடம் சென்று டிக்கெட்டின் கார்பன் பிரதியை வாங்கிப் பார்த்தபோது டிக்கெட் டிராவல் ஏஜன்ஸி மூலம் வாங்கப்படாது, பணம் கொடுத்து வாங்கப் பட்டிருப்பதை அறிந்து கொண்டார்.

போலீஸ் ஸ்டேஷனுக்குத் திரும்பி வந்தார்.

மெட்ராஸ் போலீஸுடன் தொடர்பு கொண்டு, வித்யாவைப் பற்றிய விவரங்களைச் சொல்லி, அவளைத் தேடும்படி கேட்டுக் கொண்டார்.

காதம்பரி இன்டஸ்ரீஸ் சென்றிருந்த உதவியாளர், மாலை ஐந்தரை மணிக்குத் திரும்பி வந்து இன்ஸ்பெக்டரிடம், "சார், பாஸ்கர் ஜெனரல் மானேஜராக இருக்கிறார். அவருக்கும் அவர் செகரட்டரி திவ்யாவுக்கும் ரொம்ப நெருக்கமாம். சில சமயம் பாஸ்கர், ஜெயநகரில் உள்ள அவள் வீட்டிலேயே கூட இரவு தங்குவதுண்டாம். திவ்யா ஒரு மாதிரியான பெண்ணாம். பாஸ்கரின் மனைவி வித்யாவுக்கு, இந்தத்

# சிரிக்க வையுங்கள்: சிங்கப்பூர் செல்லுங்கள்!

பால்பாயிண்ட் பேனாவை எடுங்கள். கீழே உள்ள இடத்தில் ஒரு ஜோக் அல்லது ஓர் அனுபவச் சிரிப்புத் துணுக்கை எழுதியனுப்புங்கள். பிரசுரமானால் ரூ. 25 பரிசு. அடுத்த ஆகஸ்ட் இறுதிக்குள் யாருடைய ஜோக்குகள் அல்லது துணுக்குகள் மிக அதிகமாகப் பிரசுரமாகிறதோ, அவர் ஜோடியாகச் சிங்கப்பூர் போகலாம் — செலவின்றி! திரும்பி வந்து பேட்டி தரலாம்! உறை மீது "சிரிப்பு — சிங்கப்பூர்" என்று குறிப்பிட்டு அனுப்புங்கள். முடிவு தேதி: 8.10.90.

ஜோக்/துணுக்கு:

என் பெயர்: ......................

விலாசம்: ..........................

..................

..................

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**




தொடர்பு தெரியவந்ததிலிருந்து அவர்களிடையே அடிக்கடி சண்டை கூட வருவதுண்டாம்... இதுதான் சார் திவ்யாவின் ஜெய நகர் முகவரி."

அவன் தந்த பேப்பரில் திவ்யாவின் அட்ரஸும், டெலிபோன் நம்பரும் இருந்தது.

இன்ஸ்பெக்டர் ரங்கநாத் கேஸ் பிடிபடுவதை உணர்ந்தார்.

அன்று இரவு எட்டு மணிக்கு ஜெய நகரிலுள்ள திவ்யாவின் வீட்டிற்குச் சென்று, பஸ்ஸரை அழுத்தினார்.

கையில் கார்ட்லஸ் போனுடன் திவ்யா தான் கதவைத் திறந்தாள். உடுப்பில் இருந்த இன்ஸ்பெக்டரைப் பார்த்து வியந்தாள்.

"நீங்கதானே திவ்யா?"

"எஸ் ப்ளீஸ்."

"நான் க்ரைம் இன்ஸ்பெக்டர் ரங்கநாத். உங்களிடம் சில கேள்விகள் கேட்க வேண்டும்."

"ப்ளீஸ் உள்ள வாங்க."

உள்ளே சென்று வரவேற்பறையில் அமர்ந்தார்கள்.

"நேற்று மாலையிலிருந்து உங்க ஜெனரல் மானேஜர் பாஸ்கரின் மனைவியைக் காணவில்லை."

"ஆமாம். இன்று முழுதும் ஆபீஸில் இதைத்தான் பேசிக் கொண்டார்கள்."

"உங்களுக்கு பாஸ்கரை 'ரொம்ப' நன்றாகத் தெரியுமென்றும், அடிக்கடி அவருடன் நீங்கள் வெளியே போவதுண்டு என்றும் கேள்விப் பட்டேன்.... அவர் மனைவி காணாமல் போனது சம்பந்தமாக உங்களுக்கு ஏதாவது தகவல் தெரியும் என்று நம்புகிறேன்...."

'ரொம்ப'வில் சற்று அழுத்தம் கொடுத்தார்.

"இன்ஸ்பெக்டர், அவர் கூப்பிட்டால் அவருடைய செகரட்டரி என்கிற முறையில் அவருடன் வெளியில் செல்வது என்ன தப்பு? அப்படியே எங்களுக்குள் ஏதாவது இருந்தாலும் அது எங்களுடைய பர்சனல் விஷயம். நீங்க அவரது மனைவியை ட்ரேஸ் பண்ணா முதல்ல சந்தோஷப் படறது நானாகத்தான் இருப்பேன்" என்றாள்.

மிரட்டினால் உண்மை வரும் என இன்ஸ்பெக்டர் நினைத்து, சற்று அதட்டலாக, "கார்ட்லஸை என்கிட்டக் குடுங்க, நான் பாஸ்கரிடம் பேசணும். அவருடைய பம்பாய் நம்பர் என்ன?" என்றார்.

"எனக்கு அவர் பாம்பே போனதே தெரியாது. அவர் எங்க தங்குவார்னும் தெரியாது" என்றாள்.

இன்ஸ்பெக்டர் வெறுப்புடன் திவ்யாவை முறைத்துவிட்டு, வெளியேறினார்.

இன்ஸ்பெக்டர் அன்று இரவு தன் வீட்டில் மிகவும் யோசித்து, ஒரு வெள்ளைத் தாளில் இப்படி எழுதினார்: 1) 22 ஆம்

# புதுமைகள்




"**நா**ன் இப்ப என்ன செய்யறதுன்னு தெரியலை ராமு'' என்றார் கோபால்.

''என்ன சொல்றே?'' என்றார் அவர் நண்பர் ராமு.

''என் பையன் எஸ். எஸ். எல். சி. பாஸ் பண்ணிட்டான்ல.''

''ஆமாம் அதுக்கென்ன இப்ப?''

''என் மகன் டி.ஸி.ல மிகவும் பிற்படுத்தப் பட்ட வகுப்புன்னு போட்டு, என் சாதிப் பெயரை விட்டுட்டு இன்னொரு சாதிப் பெயரைப் போட்டிருக்காங்கப்பா. என்ன அநியாயம் இது?''

''சரி சரி இப்ப உனக்குத் தேவை உன் பையனோட அட்மிஷன். முதல்ல எப்பாடு பட்டாவது உன் பையனை முதலில் ஏதாவது ஒரு பள்ளியில் ப்ளஸ் ஒன்னில் சேர்க்க முயற்சி செய். பிறகு மற்ற பிரச்னைகளைப் பார்த்துக்கலாம்.''

''அது எப்படிப்பா... இப்ப விட்டுட்டா பிற்பாடு பிரச்னை வந்துடும். அதனால முதல்ல என் பையன் படிச்ச ஸ்கூலுக்குப் போய் விவரங்களைச் சொல்லி டி.ஸி.யில திருத்தச் சொல்லணும்.''

''சரி உன்னிஷ்டம்.''

**கோ**பால் அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியரைச் சென்று சந்தித்தார். விஷயத்தைச் சொன்னார்.

கோபால் சொல்வதை அசுவாரசியமாய்க் கேட்டு விட்டு, ''நீங்க பிற்பட்ட வகுப்பு... ஆனா மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்புன்னு போட்டிருக்குன்னு சொல்றீங்க. பி.ஸி.யை விட எம்.பி.ஸி.க்குச் சலுகைகள் உண்டு. பேசாம இருந்துடுங்க'' என்றார் தலைமை ஆசிரியர்.

''அது எப்படி சார், எங்க சாதியை விட்டுக் கொடுக்க முடியும்? பின்னால் ஏதாவது பிரச்னை வந்தாப் பையன் எதிர்காலம் பாதிக்கும். நான் வேணும்னே பொய்யான விவரங்கள் கொடுத்ததா என் மேலயும் குற்றச்சாட்டு வரும். தவிரவும் எங்க சொந்தக்காரங்களே நாளைக்கு என்னைச் சாடுவாங்க. பிற்பாடு பையனுக்கு எந்த சாதில பெண் எடுப்பேன்?''

''உங்க பீலிங்ஸ் எனக்குப் புரியுது. இப்ப ஸ்கூல்ல சேர்த்துடுங்க. பிற்பாடு பார்த்துக்கலாம்.''

''அது எப்படி சார்... புதுசா நான் சேர்க்கப் போற பள்ளியில எஸ்.எஸ்.எல்.சி. முடிச்சவுடனே, டி.ஸி. வாங்கினப்பவே ஏன் கவனிக்கலை? இத்தனை வருஷங்களா கவனிக்காம இப்ப வந்து மாத்தணும்னு சொன்னா எப்படின்னு கேட்டா, என்ன பதில் சொல்வேன் சார்? தவிரவும் மேலிடத்துக்கு விவரம் தெரிஞ்சா 'உங்களையும் விளக்கம் கேட்கலாமில்லையா?''

"ஓ அப்படியொன்று இருக்கிறதை நான் மறந்தே போனேன். இப்ப அட்மிஷன் நேரம் பாருங்க. உங்க பையனோட டி.ஸி.யைக் கொடுத்திட்டுப் போங்க. நான் கவனிக்கச் சொல்றேன்.''

''அப்ப நான் எப்ப சார் வரட்டும்? ஏன்னா டி.ஸி. கையில கிடைச்சப்புறம்தான் அட்மிஷன் விஷயமா அலையணும்.''

''இன்னைக்குப் போய் நாளை மறுநாள் வாங்க மிஸ்டர் கோபால்.''

''நிச்சயமா நாளை மறுநாள் கிடைச்சிடுமா?''

''பயப்படாம போய் வாங்க. அட்மிஷன் விஷயமில்லையா... நாங்க விட்டுருவமா?"

**ம**று நாளைக்கு மறுநாள் கோபால் போன போது, அந்த ஹெட்மாஸ்டர் வீர

வில்லை. அங்கிருந்த குமாஸ்தாவை நெருங்கி விவரம் கேட்டார் கோபால்.

''அப்படியா விஷயம்.. ஹெட் மாஸ்டர் எங்கிட்ட எதுவுமே இது பத்திச் சொல்ல லையே...''

''சார்... தயவு பண்ணிப் பாருங்க. என் பையனோட டி.ஸி.யை உங்ககிட்டக் கொடுத்திருக்காரான்னு.''

''இல்லை சார். கொடுத்திருந்தா நான் ஏன் உங்கிட்டப் பொய் சொல்லணும்?''

''அப்ப ஹெட் மாஸ்டர் எப்பத்தான் வருவார்?''

''இன்னைக்கு ஹெட் மாஸ்டரோட அப்பாவுக்குத் திதி. அதனால லீவு. நீங்க நாளைக்குப் பன்னிரண்டு மணி சுமாருக்கு வாங்க.''

''சார் இப்பவே எஸ். எஸ். எல். ஸி. ரிஸல்டு வந்து மூணு நாட்களாச்சு. அங்கங்கே ஒவ்வொரு ஸ்கூல்லயும் கூட்டம் அலைமோதுது. இந்த லட்சணத்தில் என் பையன் மார்க்குகள் வேறு கம்மி. டி. ஸி. இல்லாம எங்கேயும் என் பையனைச் சேர்க்க முடியாது சார். பிளீஸ்! உங்க ஸ்கூல்லயும் டென்த்துக்கு மேலே இல்லை. அதனால்...''

''ஏன் சார் பயப்படறீங்க. நாளைக்கு நிச்சயம் உங்க வேலை முடிஞ்சிடும். நானாச்சு உங்க வேலையை முடிச்சுக் கொடுக்க.''

''சார் தப்பா நினைக்கலைன்னா இந்த ஐம்பது ரூபாயைத் தயவு பண்ணி வாங்கிக் கணும்.''

''என்னய்யா இது... இதெல்லாம் எனக்குப் பிடிக்காது. லஞ்சமா கொடுக்கிறீங்க...''

கோபால் ஆடிப் போனார்.

''லஞ்சம்னு ஏன் நினைக்கறீங்க? தயவு பண்ணி என் விஷயத்தை...'' குழைந்தார் கோபால்.

அந்தப் பள்ளியின் பியூன் கோபாலை வெளியே தள்ளிக் கொண்டு வந்தான்.

''என்னங்க உங்களுக்குக் கொஞ்சமாவது மூளையிருக்கா? என்னை எதிரில் வச்சுக் கிட்டு நேரடியா அவர்கிட்ட பணம் கொடுக்கலாமா?''

''தப்புத்தான்.''

''இதெல்லாம் நான் பார்த்து, முடிச்சுத் தர மாட்டேனா... நான் எதுக்கு இருக்கேன். தவிரவும் பழைய ரெகார்டுகளையெல்லாம் கிளறிப் பார்க்கணும். உங்க பையன் எப்ப இங்கே ஸ்கூலில் சேர்ந்தான்?''

''ஐந்து வருஷங்களுக்கு முன்பு, ஆறாம் வகுப்பில்.''

''அதுக்கு முன்னால...''

''அதுக்கு முன்னால ஒரு எலிமெண்டரி ஸ்கூலில் படிச்சிட்டிருந்தான். இதையெல்லாம் ஏன் கேட்கிறீங்க?''

''இல்லை பழைய ரெகார்டுகளையெல்லாம் கிளறி உங்க பையனோட அப்ளிகேஷனைத் தேடி எடுக்கணும். அதிலஎன்ன ஜாதி கொடுத்திருக்கீங்களோ அதுதான் இப்ப இருக்கும்.''

''அப்ப சரியாத்தான் என் சாதிப் பெயரைக் கொடுத்தேன்.''

''முன்னால இருந்த குமாஸ்தா கூடத் தப்பிதமா எழுதியிருக்கலாம். சரி சரி இன்னொரு நூறு ரூபாய் கொடுங்க.''

''எதுக்கு?''

''எதுக்கா? நல்லாக் கேட்டீங்க. இந்த குமாஸ்தா நூறுக்குக் குறைஞ்சு வாங்கறதில்லை. நீங்க லொடக்குனு ஐம்பதைக் கொடுத்ததாலதான் அவர் கோபப்பட்டார். அப்புறம் எனக்கு ஐம்பதாவது வேண்டாமா?''

''உங்களுக்குமா?''

''நல்லாக் கேட்டீங்க போங்க. இது அட்மிஷன் நேரமில்லையா! பழைய ஐந்து வருஷத்துப் பைல்களை யார் கிளறுவாங்களாம்? இதையெல்லாம் நான்தானே செஞ்சு முடிச்சாகணும்.''

''சரி தரேன்... ஆனா...''

''கச்சிதமாக் காரியம் முடிஞ்சிடும். நீங்க நாளைக்கு இதே நேரத்துக்கு வந்து டி.ஸியை மாத்திட்டுப் போயிடலாம்!''

**ம**றுநாள் போன போது, சுறுசுறுப்பாய் வேலை நடந்து கொண்டிருந்தது.

ஐந்து வருஷங்கள் முன் எலிமெண்டரி ஸ்கூலில் கொடுத்த டி.ஸி.யிலேயே யாரோ அதை மாற்றி விட்டிருந்தார்கள்.

''இன்னா சார் படா பேஜாராப் போச்சு. இதை யார் மாத்தினது?'' என்றான் பியூன்.

''நிச்சயமா நான் இல்லை.''

''அப்ப, தப்பு எங்கேயோ நடந்திருக்கு. முதல்ல இருந்த குமாஸ்தா கூடப் பண்ணியிருக்கலாம். உங்க பையன் முதல்ல படிச்ச எலிமெண்டரி ஸ்கூலுக்குப் போய் நீங்க கைப்பட எழுதிக் கொடுத்த விண்ணப்பத்தில் என்ன சாதி போட்டிருக்குன்னு கண்டுக்கிட்டு வந்துட்டா இதைச் சரி பண்ணிடலாம்...''

''வேற வழியே இல்லையாப்பா?''

''எங்கேயோ தப்பு நடந்திருக்கு. சரி பண்ணியாகணுமில்ல. உங்க பையன் படிச்ச பழைய ஸ்கூலுக்குப் போய் பழைய ரெகார்டுகளைக் கிளறி எடுத்தாறதைத் தவிர வேற வழியில்லை...''

''இப்பவே ஒரு வாரமாயிடுச்சி. ஸ்கூல்ல எப்படி அட்மிஷன் கிடைக்கும் லேட்டானா?''

''என்ன சார் செய்யறது. நாங்க தப்புச் செஞ்சிருந்தா, நாங்க திருத்திக் கொடுத்திடுவோம். உங்க கைப்பட எழுதிக் கொடுத்த

ஜெயசல்யா ரங்கநாதன்



''என்னங்க, சாப்பாட்டில் பெரிய கல்லாக் கிடக்குது?''

''சின்னதா இருந்தாப் பொறுக்கக் கஷ்டப்படுவீங்களே, சார்!''

— ஞான. குமரன்.

அப்ளிகேஷனும் இங்கே இல்லை.''

''**ப**ழைய பள்ளிக்குக் கோபால் சென்று பார்த்த போது, ''பத்து வருடத்திற்கு முன்பு இருந்த ரெகார்டுகளையா... எப்படித் தேடறதாம்?'' என்றார் தலைமை யாசிரியர்.

''எனக்கு வேற வழியே தெரியலை. என் பையனோட எதிர்காலம் கேள்விக்குறியா இருக்கு...'' என்றார் கோபால்.

''இப்ப முடியாது. இங்கேயும் அட்மிஷன் நேரம். ஒரு மனு எழுதிக் கொடுத்திட்டுப் போங்க. அடுத்த மாதம் வாங்க. பழைய குப்பைகள் எங்கேயிருக்கோ தேடித்தான் பார்க்கணும்...'' என்று அலுத்துக் கொண்டார் அவர்.

''சார் கொஞ்சம் தயவு பண்ணி....''

''எங்க நேரத்தை வீணாக்காதீங்க. போயிட்டு வாங்க சார்...''

**கோ**பால் ராமுவிடம் வந்து முறையிட்டார்.

''என்னடா இது அக்கிரமமா இருக்கு. உங்களுக்குன்னு சாதிச் சங்கமேயில்லையா?'' என்றார் ராமு.

''ஆமாம் நல்ல சமயத்திலே நினைவு படுத்தினே... இதோ வரேன்'' என்று எங்கேயோ விரைந்தார்.

அவர் உறவினர் ஒருவர் அந்தச் சாதி சங்கத்துச் செயலாளராம். அவரைப் போய்ப் பார்த்து விவரம் சொல்ல, அவரும் முதலில் நம்ம சாதிச் சங்கத்தில சேருங்க என்று சொல்ல, அந்தச் சங்கத்துக்குச் சந்தா கட்டிச் சேர்ந்தார் கோபால்.

''இன்னும் இரண்டு நாட்களில் எங்க லெட்டர் ஹெட்டில் லெட்டர் வாங்கித் தரேன் கோபால்...'' என்றார் அவர்.

''இரண்டு நாட்களா... ஏற்கெனவே லேட்டாயிடுச்சே!''

''என்ன செய்யறது. லெட்டர் பாட் காலியாயிடுச்சு. பிரிண்டிங்குக்குக் கொடுத்திருக்கோம். அது வந்தவுடன்...''

''என்னைக்கு வரும்...?''

''நாளைக்கு நான் உங்களுக்காக அந்த பிரஸ்ஸுக்குப் போய் லெட்டர் ஹெட் வாங்கி வந்து பிரசிடெண்டு கிட்டக் கையெழுத்து வாங்கி வைக்கிறேன்.''

''இந்தாங்க இருபத்தஞ்சு ரூபாய். பிரஸ்ஸுக்குப் போக பிரசிடெண்ட் சார் வீட்டுக்குப் போய் வரச் செலவுக்கு...''

''இதெல்லாம் எதுக்கு? சரி கொடுங்க...''

**சொ**ன்னபடி லெட்டர் பாடில் 'கோபாலின் மகன் இன்ன சாதியைச் சேர்ந்தவன் என்று இந்தச் சங்கம் தெரிவிக்கிறது' என்று சொல்ல... அதை எடுத்துக் கொண்டு மகன் படித்த பள்ளிக்கு விரைந்தார் கோபால்.

அதைப் பார்த்த ஹெட்மாஸ்டர் ''இது போதாது சார். இதை அடிப்படையா வச்சு நாங்க காஸ்ட் மாத்த முடியாது. மாத்தினா நாங்க ஜெயிலுக்குத்தான் போகணும்.''

''அப்ப என்னதான் சார் செய்யணும்?''

''இதை எடுத்துக்கிட்டு உங்க வீட்டுக்கு அருகாமையில் இருக்கிற தாலுகாபீசில் கொடுங்க. தாசில்தார்தான் உங்க மனுவை ஏத்துக்கிட்டு சாதிச் சான்றிதழ் வழங்க முடியும். அதை எடுத்துக்கிட்டு வந்தா அதை அடிப்படையா வச்சு நாங்க உங்க டி.ஸி.ல சாதியை மாத்தித் தருவோம்!'' என்றார்.

தாசில்தார் ஆபீசுக்குப் படையெடுத்து, தாசில்தாரைப் பார்க்க முடியாமல் காத்துக் கிடந்து, பின்பு அங்குள்ள புரோக்கர் ஒருவர் மூலமாக முயற்சி செய்து, அவனும் ''உங்க தொகுதி எம்.எல்.ஏ.தான் நீங்க இன்னார்னு தெரியப்படுத்தணும். இன்ன சாதி நீங்கன்னு சர்டிபிகேட் கொடுக்கணும். அதை வச்சுக்கிட்டுத்தான் தாசில்தார் ஆபீஸ்ல பரிசீலித்துச் சாதிச் சான்றிதழ் வழங்குவாங்க'' என்றான்.

''எத்தனை நாட்களாகும். எங்கே எம்.எல்.ஏ.வைப் பார்க்கிறதாம்?''

''ஏன் கவலைப்படறீங்க. வெள்ளையப் பணைத் தள்ளி விட்டா எல்லாம் நடந்துடும்.''

''சரி எவ்வளவு வேணும்.''

''ஒரு முந்நூறு கொடுங்க. இதில் எல்லோருக்கும் பங்குண்டு.''

''பணத்தைப் பற்றியில்லை. வேலை...''

''நாளன்னைக்குக் காலைல பதினோரு மணிக்கு வந்து, உங்க சாதிச் சான்றிதழை வாங்கிட்டுப் போங்க சார். பணம் கூட இப்ப கொடுக்க வேணாம். நான் தாசில்தார் ஆபீஸ் சிலோட கொடுத்தப்புறம்...''

''சரி.''

**ஒ**ரு வழியாகக் கோபால் தம் மகனின் டி.ஸி.யில் உண்மையான ஜாதியை எழுதி வாங்கிய போது எல்லாப் பள்ளிகளிலும் பிளஸ் ஒன்றுக்கான அட்மிஷன் சுத்தமாக முடிந்திருந்தது!

# அந்தத் துப்பாக்கி...

**COUNT DOWN — 15**

**ம**ணிமாறன் தன் துப்பாக்கியை அமீர் ஜவஹரின் மார்புக்குக் குறி வைத்தான்.

அமீர் ஜவஹரின் பயிற்சி பெற்ற மூளை, கம்ப்யூட்டர் வேகத்தில் மணிமாறன் எதிரியாகி விட்டான் என்பதைப் புரிந்து கொண்டது.

எச்சரிக்கை! எச்சரிக்கை!

நேரத்தைச் சேகரிக்கும் உபாயமாக, கண்களில் அதிர்ச்சி காட்டி, "மணிமாறன் என்ன இது?" என்றான்.

"உன் தேசப்பற்றுக்குப் பரிசு" என்று சொல்லிக் கொண்டு அமீர் ஜவஹரின் புறம் இன்னும் சௌகரியமாகத் திரும்பி உட்கார்ந்தான் மணிமாறன்.

"எங்கே அந்தத் துப்பாக்கி?"

"எந்தத் துப்பாக்கி?" என்று கேட்கும் போதே அமீர் ஜவஹரின் முழங்கால் மடங்கி எழுந்தது. கீழ்ப்புறமிருந்து மணிமாறனின் கையை மோதியது. அதே சமயம் இரு கைகளும் முன்னேறி மணிமாறனின் விழிகளருகே வெகு வேகத்துடன் நீந்தின.

மணிமாறனின் கையிலிருந்த துப்பாக்கி வெடித்தது. குண்டு இருட்டில் பயணமாகி, மரக்கிளை ஒன்றில் மோதியது. கனவு கலைக்கப்பட்ட பட்சி ஒன்று சிழ்க் சிழ்க் என்று இறக்கைகளைப் படபடத்துப் பறந்தது.

மணிமாறனின் கையிலிருந்த துப்பாக்கியைத் தட்டி விடும் நோக்கத்துடன், அமீர் ஜவஹர் அவன் புஜத்தில் தன் மண்டையை மோதினான். அதற்குள் மணிமாறன் மல்லாந்து, கால்களை உயர்த்தி, அமீர் ஜவஹரின் வயிற்றில் உதைத்துக் கிளப்பினான். அமீர் ஜவஹர் அந்தரத்தில் குட்டிக் கரணம் அடித்து, ஜீப்பின் மறுபுறம் இறங்கினான். மணிமாறன், படமெடுத்த பாம்பின் சீற்றத்தோடு, கழுத்தை வெட்டித் திருப்பு முன், அமீர் ஜவஹர் மரங்களின் இருட்டில் கலந்து விட்டிருந்தான்.

**பு**து தில்லி. வானத்தில் ஜிகினாத் தூவலாக நட்சத்திரங்கள். அந்த நட்சத்திரங்களுக்குக் கூட அனுமதி தராத ஜன்னல் திரைகள் இழுத்து மூடப்பட்ட கர்னல் அருள்தாஸின் கோவிந்தபுரி மாளிகை.

குளிரூட்டப்பட்ட அறையில், கர்னல் தன் சக்கர நாற்காலியில் முன் தள்ளி உட்கார்ந்திருந்தார். புருவங்கள் முடிச்சிட்டிருந்தன. கவனம் முழுதும் எதிரே சுவரில் இருந்தது.

சுவரோடு பொருத்தப்பட்டிருந்த அந்த அமைப்பை அச்சுதனும் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான்.

வருடக்கணக்கில் தூசியைச் சேர்த்துப் போர்த்தியிருந்த மெல்லிய துணிக்குப் பின்னே வட்டமான சக்தி வாய்ந்த ஸ்பீக்கரிலிருந்து மின்சார செருமல் ர்ர்ர், ட்ட்ட், ப்ப்ப்...

அச்சுதன் ஒரு வட்டக் குமிழை மெலிதாகத் திருப்பி, அலைவரிசையைக் கூர்மையாக்கினான்.

'அட்டென்ஷன் மணிமாறன். அட்டென்ஷன் மணிமாறன்...'

பாகிஸ்தானின் ரகசிய அலைவரிசையில் அவசரக்குரல் கமறியது.

'முந்தைய கமாண்டை கான்சல் செய்து இந்த உத்தரவு. பாகிஸ்தானிலிருந்து இந்திய எல்லைக்குள் பிரவேசித்திருக்கும் அமீர்

**ஒற்று வேலையைத் தொழிலாக ஏற்ற
வனின் முதுகு, ஆபத்துகளுக்குத் திறந்து
போடப்படுகிறது. எப்பொழுது இந்தத்
தொழிலில் இறங்கினானோ, அன்றைவி
லிருந்தே, அவனுடைய கட்டுப்பாட்டில்
இல்லாத திசைகளில் இருந்து, அவன்
மீது வலைவெறியப்படும் அபாயத்திற்கு
அவன் தயாராயிருக்க வேண்டும். அவன்
பொத்தி வைத்திருக்கும் ரகசியங்களுக்கு
விலையாக அவன் உயிரே பேசப்படும்
தருணத்தை ஏற்கப் பழக வேண்டும்.**

**— ஜே. சி. மாஸ்டர்மேன்.**




அஞ்சனா மைக்கேல் ராஜ்

ஜவஹருக்கு எல்லா உதவிகளும் செய்யச் சொல்லி இட்ட முந்தைய உத்தரவை ரத்து செய்கிறோம். பாகிஸ்தானின் மிக முக்கிய. மான — ரிபீட் — அதி முக்கியமான ஒரு ரகசியத்தை அமீர் ஜவஹர் வன்முறையைப் பயன்படுத்தி சாமர்த்தியமாக எடுத்துக் கொண்டு தப்பி வந்திருக்கிறான்....

'996090 என்ற எண் பொறிக்கப்பட்ட ஒரு டம்மித் துப்பாக்கி அமீர் ஜவஹரிடத்தில் இருக்கிறது. அதை உடனே கைப்பற்று. அது உடனடியாக பாகிஸ்தான் ராணுவத் தலைமையகத்திற்குத் திருப்பப்பட வேண்டும். எந்தவிதச் சேதமுமில்லாமல் — ரிபீட் — எந்த விதச் சேதமுமில்லாமல்.....

'டம்மித் துப்பாக்கியுடன் உடனே நீ பாகிஸ்தானிற்குள் பிரவேசிக்க வேண்டும். எல்லையில் ராணுவ ஹெலிகாப்டர் தயாராகக் காத்திருக்கிறது. டம்மித் துப்பாக்கியை பர்ஸனலாக நீயே திருப்பித்தர வேண்டுமென்பதால் வேறு யாரிடமும் அதை ஒப்படைக்க வேண்டாம்... ஓவர்....'

''அப்படியா... சரி... சரி... சரி'' என்று மணிமாறனின் பதில் குரலும் அதே அலை வரிசையில் கேட்டது.

அருள்தாஸும், அச்சுதனும் பார்வைகளைப் பரிமாறிக் கொண்டார்கள்.

''முதல் குழப்பம்'' என்றார் கர்னல் அருள்தாஸ். எல்லாம் ஸ்மூத்தாக நடந்து கொண்டிருக்கிறதே. அமீர் ஜவஹரை பத்திரமாக இந்தியப் பகுதியில் ரிலீவ் பண்ணிக் கொள்ளச் சொல்லி மணிமாறனுக்கு பாகிஸ்தானிலிருந்து உத்தரவு வந்ததே என்று நாம் நிதானமாயிருந்தது தப்பாகி விட்டது. அமீர் ஜவஹர் எல்லையைத் தாண்டி பதினைந்து நிமிடங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் அவன் எடுத்து வந்த துப்பாக்கி பற்றித் தகவல் தெரிந்து விட்டது அவர்களுக்கு. இப்போது அவனுக்கு ஆபத்து அச்சுதன். அவனை உடனே காப்பாற்றியாக வேண்டும். அந்தத் துப்பாக்கியில் இருக்கும் மைக்ரோபிலிம்கள் நமக்கு அவசியம் வேண்டும்.

''நாம் முதலில் செய்ய வேண்டியது வேறொன்று, கர்னல்.''

''என்ன?''

''எல்லைப் பகுதியை சீல் செய்ய வேண்டும். மணிமாறன் அமீர் ஜவஹரிடம் இருந்து துப்பாக்கியைப் பறித்து விட்டாலும் கூட அவன் பாகிஸ்தானிற்குள் செல்லக் கூடாது.''

''ஸ்மார்ட் பாய்! அருள்தாஸ் டெலிபோனை அருகே இழுத்தார். கனெக்ட் மீ டு லெஃப்டினண்ட் ஜெனரல் இம்மீடியட்லி'' என்றார்.

மூன்று நிமிடங்களுக்குள் உத்தரவுகள் விஞ்ஞானத்தின் நவீன வேகத்தில் காற்றில்

பயணம் செய்தன.

''அச்சுதன்.... உனக்கு ஸ்பெஷல் ஹெலிகாப்டர் ஏற்பாடு செய்திருக்கிறேன். நீ ஸ்தலத்திற்கு நேரில் போ.. ஜவஹரிட மிருந்து துப்பாக்கியை வாங்கிக் கொள்... மணிமாறனை மடக்கு.''

அருள்தாஸ் அச்சுதனுக்குப் பரபரப்பான உத்தரவுகளைப் பிறப்பித்தார்.

**ம**ணிமாறன் ஜீப்பிலிருந்து பாம்பு போல் நழுவி இறங்கினான்.

ஒரு கையில் டார்ச்சும், மற்றதில் தயார் நிலையில் துப்பாக்கியும் இருந்தது. கனத்த பூட்ஸ்களுக்குக் கீழே உடையும், உலர்ந்த இலைகளை, சப்திக்காது நகர்ந்தான். ராணுவ அணிவகுப்பு போல அடர்ந்து நின்ற மரங்கள், டார்ச் வெளிச்சத்தைக் கத்திரித்துப் போட்டன. நிழல்களின், நிழல்களில் அமீர் ஜவஹர் சுலபமாகக் கலந்து விட்டிருப்பதை மணிமாறன் உணர்ந்தான். அந்த காட்டுப் பகுதியைப் பற்றி அவனுக்குத் தெரிந்த விவரங்களை உடனடியாகச் சிந்தனைத் திரையில் இட்டுப் பார்த்தான்.

ஒரு புறம் சுழல்களோடு நிறைந்த காட்டாறு கரை கட்டிய அந்த வனப்பகுதியில், நிலம் வழியே வெளியேற ஒரே வழி தான் இருந்தது. அதை அடைந்து விட்டால் போதும்.

அமீர் ஜவஹரிடம் ஆயுதம் எதுவும் இல்லை. இருந்திருந்தால் அவன் முன்னெச்சரிக்கையாக இந்நேரம் அதை உபயோகித்திருப்பான்.

மணிமாறன் டார்ச் வெளிச்சத்தைப் பாய்ச்சி உடனே அணைத்து, சற்று முன்னிருந்த பாதையிலிருந்து துள்ளி விலகி, அதே முறையை மறுபடி மறுபடி பயன்படுத்தி, அமீர் ஜவஹரைத் தேடி முன்னேறினான்.

**அ**மீர் ஜவஹர் தன் சட்டைக் காலருக்குள் நுழைந்த கட்டெறும்பை நசுக்கினான். கையில் டார்ச்சும் இல்லாமல் இருந்த ஆயுதத்தையும் பாகிஸ்தானிற்குள் நுழைந்த போது பறிகொடுத்து விட்டு வந்த முட்டாள் தனத்தை நொந்து கொண்டான். மேஜர் ஜெனரல் அப்துல் கரீமும், மேஜர் நாஸரும் எப்படியும் குறைந்தது இரண்டு, மூன்று மணி நேரங்களுக்கு அசைய மாட்டார்கள் என்ற தைரியத்தில் இருந்தது தப்பு.

இப்பொழுது அவனுடைய வாய்ப்புகள் அழிந்து போய் விடவில்லை. மணிமாறன் என்ற ஒற்றை ஆளைச் சாதுர்யமாகச் சமாளித்து விட்டால் போதும். கைவசம் ஜீப் இருக்கிறது. முதல் இந்திய ராணுவ முகாமை அடைந்து, உடனேயே கர்னல் அருள்தாஸிற்குத் தகவல் தந்து... நினைப்பை அறுத்தான். சற்று தூரத்தில் டார்ச் வெளிச்சம்.

மணிமாறனின் டார்ச் இருபது மரங்கள் தள்ளிச் சிமிட்டிய போது, அமீர் ஜவஹர் அருகிலிருந்த மரத்தில் சப்தமில்லாமல் குரங்கின் சாதுர்யத்தோடு ஏறினான். மணிமாறன் எப்படியும் இங்கே வரவேண்டும். மரத்திற்குக் கீழே வந்தவுடன் அவன் மீது குதித்து ஆச்சரியப் படுத்தி....

**சி**ம்பா அருகே 'சிக்கன் நெக்' என்று செல்லப் பெயரால் அழைக்கப்படும் இந்திய வரைபடம் கோழிக்குஞ்சின் கழுத்து போல் மெலிந்து திரும்பும் — பகுதியில் அந்த ராணுவ ஹெலிகாப்டர் ஏராளப் புழுதியைப் பறக்கவிட்டு இறங்கியது. அது பாதங்களைப் பூமியில் பதித்ததும் கதவு திறந்து குதித்த நான்கு அதிகாரிகளும் அவர்களுக்கு நடுவில் இருந்த அச்சுதனும் ஒரே மாதிரியான பச்சைக்குழப்பச் சீருடை அணிந்திருந்தார்கள்.

''ஆர் யூ ஆர்ம்ட்?'' என்று விசாரிக்கப் பட்ட அச்சுதன், தன் தோள்புறம் சட்டையின் உள்புறம் இருந்த பிஸ்டலையும் இடுப்பு பெல்ட்டோடு இழைந்திருந்த ஆர்மி ரிவால்வாரையும், தொட்டுக் காட்டினான். காத்திருந்த ஐந்து ஜீப்களில் அவர்கள் ஏறினர்.

''அமீர் ஜவஹர் எல்லையைக் கடந்த இடம் நமக்குத் தெரியும். அந்த இடத்தைச் சுற்றி வளைத்து, மணிமாறனைத் தப்ப விடாமல் சூழ்ந்து விடலாம். ரேடியோ அலை வரிசைகளில் அவ்வப்போது செய்தி பரிமாறிக் கொள்வோம்,'' என்றான் அச்சுதன்.

''ஓகே...''

ஐந்து ஜீப்புகளும் ஆக்டோபஸின் கைகளைப் போல ஐந்து திசைகளில் பிரிந்தன.

**அ**மீர் ஜவஹர் துடிக்கும் இதயத்துடன் மணிமாறனைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

இன்னும் இரண்டே மரங்கள். மணிமாறன் நேர் கீழே வந்துவிடுவான்.

அமீர் ஜவஹர், மூச்சை இழுத்துப் பிடித்துக் காத்திருந்தான்.

திடீரென்று 'டிஷ்யூங்' என்று அமைதியை அதிரடித்து ஒரு தோட்டா வெடித்தது. அமீர் ஜவஹர் தன் ஆடு சதையில் புகுந்து மேலே ஊடுருவி முழங்காலைத் தாண்டி தொடைக்குள் ஈயம் சிதறுவதை உணர்வதற்குள் அப்படியே கால் மடங்கி, மரத்திலிருந்து அடிபட்ட புறா போல் விழுந்தான்.

உடன் அவன் முகத்தில் டார்ச் வெளிச்சமும் நெற்றிப் பொட்டிற்குக் குறி வைத்த பிஸ்டலும் தென்பட்டன.

''முட்டாள் நண்பா!'' மணிமாறனின் குரலில் மெலிதான எள்ளல் இருந்தது. ''நீ இருந்த இடத்தை அப்போதே எதிர் மரத்தில் விழுந்த உன் நிழலை வைத்துப் பார்த்து விட்டேன். ஆனால் அங்கிருந்து சுட்டால், குறி பிசகும், நீ தப்பி விடுவாய் என்று தெரிந்து தான் இவ்வளவு நெருக்கமாய் வந்து சுட முடிவு செய்தேன். எங்கே அந்தத் துப்பாக்கி?''

## புதிய பட்டு ஜவுளி ஷோரூம் (A/C)



நவராத்திரி, தீபாவளி மற்றும் திருமணத்திற்கு தேவையான அனைத்துரக பட்டு ஜவுளிகளும், பாவாடை ரகங்களும் நூல் ஜவுளிகளும் குறைந்த விலையில் சிறந்த ரகங்கள் கிடைக்குமிடம்



**மகாலட்சுமி சில்க்ஸ்**

(முருகன் கல்யாண மண்டபம் காம்ப்ளக்ஸில்)
13/1, தெற்கு போக் ரோடு,
தி.நகர்,
சென்னை-17.
தொலைபேசி : 444664.






## ஜோதிடம் கற்க வேண்டுமா?

### தபால் வழியில் ஓர் அரிய சந்தர்ப்பம்!!

''கடலங்குடி'' என்றால் ''ஜோதிடம்'', ''ஜோதிடம்'' என்றால் ''கடலங்குடி'' என யாவரும் அறிந்ததே. தமிழுலகில் 1920-ஆம் வருடம் முதல் இன்றுவரை தளராது உழைத்து வரும் நம்பிக்கையும், புகழும் வாய்ந்த ஜோதிட ஸ்தாபனம் ''கடலங்குடி'' ஜோதிட சக்ர வர்த்தி, அபிநவ வராஹமிஹிரர் ஜோதிட தாத்தா என பலராலும் போற்றப்பட்ட பண்டித கடலங்குடி நடேச சாஸ்திரியாரையும் அவரது ஜோதிட நற்பணியையும் அறியாதோர் யார்?

அன்னாரின் சிஷ்யையும், புதல்வியுமான ஜோதிட கலாநிதி டாக்டர் கே.என். சரஸ்வதி அவர்கள் தம்முடைய நாற்பது ஆண்டுகளுக்கும் மேலான ஜோதிட அனுபவமும், பரம்பரை கலைஞானமும், பலருக்கும் பயன்படும் முறையில் தபால் மூலம் எளிய ஜோதிட பாட திட்டத்தை உருவாக்கி உள்ளார்.

''கடலங்குடி ஜோதிட ஆய்வு மையத்தின்'' மூலம் நடத்திவரும் ஜோதிட தபால் வழி பாட திட்டத்தின் மூலம் ஆறு மாதங்களில் ஜோதிடம் கற்பித்து இறுதியில், மையத்தின் சார்பில் சான்றிதழ் வழங்கப்படும்.

ஆயிரக்கணக்கான உள்நாட்டு வெளிநாட்டு மாணவர்களைப் பயனடைய உதவிய ''கடலங்குடி ஜோதிட ஆய்வு மையத்திற்கு'' உடனே அட்மிஷன் பாரங்களுக்கும் (Prospectus)க்கும் ரூ.6.00 M.O. செய்து தொடர்பு கொள்ளவும்.

வெளிநாட்டோருக்குக் கட்டணமான (தபால் செலவு உள்பட) ரூ.650/- D/D மூலம் அனுப்பி உடனே அவர்கள் சேர்ந்து கொள்ளலாம்.

**விஜயதசமி செப்டம்பர் 29, 1990 முதல் ஆரம்பிக்கும்**

**புது வகுப்பில் சேர்ந்து பயனடையவும்**

**Kadalangudi Astrological Research Centre (Regd)**

**38, Natesa Iyer Street, (Near T.Nagar Bus Terminus)**
**MADRAS - 600 017.**

# வாலாஜா ரோடு

# பாண்டி பஜார்

# ~~புரசைவாக்கம்~~

பகவான்
எங்கும்
இருக்கிறார்
ஆனால்
இப்போது
வாலாஜா ரோடு,
பாண்டி பஜாரில்
மட்டும்
காட்சி தருகிறார்

# 10%

தள்ளுபடி

(TM)

## ஸ்ரீ பகவான் கட் பீஸ் ஜங்ஷன்

21, பாண்டி பஜார், சென்னை.
போன் : 443642, 445777

123, வாலாஜா ரோடு, சென்னை.
போன் : 846966

ஞாயிறு கடை உண்டு

அமீர் ஜவஹர் காலுக்குள் ராக்கெட் செலுத்தப்பட்டது போல், வலியின் வேதனையில் புரண்டான்.

''என்னிடம் எந்தத் துப்பாக்கியும் இல்... ஆ....''

மணிமாறன் தன் பூட்ஸ் காலால் அமீர் ஜவஹரின் முழங்காலை உதைத்ததால் எழுந்த 'ஆ.'

'அமீர்...உனக்குஉதவுவதற்காகஎல்லைப் பகுதியிலேயே காத்திருந்தேனே... அப்பொழுது கூட நீ துரோகி என்று எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால்....''

அமீர் ஜவஹர் மணிமாறனைப் பார்த்தான். பற்களைக் கடித்துக் கொண்டு வார்த்தைகளைத் துப்பினான்.

''நீ மட்டும், துரோகியில்லையா?''

''அமீர்... கமான்...' அந்தத் துப்பாக்கியைக் கொடுத்து விடு. உயிர் பிழைத்துக் கடைசி நாள் வரைக்கும் ஒற்றைக் காலுடனாவது நடமாடலாம்.''

''நோ...'' அமீர் ஜவஹர் பின்புறமாகத் தரையில் நகர்ந்தான்.

''ஸாரி அமீர். உனக்கு மறுபடி மறுபடி சான்ஸ் தர எனக்கு நேரமில்லை....''

மணிமாறன் துப்பாக்கியை அமீர் ஜவஹரின் மார்புக்குக் குறி வைத்து இழுத்தான்.

அமீர் ஜவஹர் துள்ளி எறியப்பட்டான். இந்திய மண்ணின் புழுதியில் தன் இறுதி மூச்சை முழுதும் சுவாசிக்காமலேயே அடங்கினான்.

மணிமாறன் அவனை நெருங்கி, காலால் புரட்டி, குனிந்து உட்கார்ந்து அவனுடைய இடுப்புப் பாண்டிற்குள்ளிருந்து அந்தத் துப்பாக்கியை எடுத்தான். அதன் கீழே பொறிக்கப்பட்டிருந்த எண்களை டார்ச் வெளிச்சத்தில் பார்த்தான்.

— 996090 —

மணிமாறனின் உதடுகள் புன்னகையாக வளைந்தன.

(தொடரும்)

# ஸ்டாலின் அணிக்குத் தனி மரியாதைதான்!

●● ஸ்டாலின் தலைமை வகித்து வந்த இளைஞரணி பிரிவுக்குத் தனி மரியாதைதான். இந்தப் பிரிவு, தலைவர்கள் அமர்ந்திருந்த மேடைக்கருகில் வந்ததும், இளைஞரணித் தொண்டர் ஒருவர் மேடைக்குப் பக்கத்தில் சென்று மைக்கில் 'லெப்ட், ரைட்' என்றும் ஏதேதோ கட்டளைகள் பிறப்பித்தும் அந்த அணியினரை ராணுவத்தைப் போல நடை போட வைத்தார். போதாதற்கு டேப் ரிகார்டர் இசை வேறு.

●● ஊர்வலப் பாதையில், இலவசமாக மோர், உணவுப் பொட்டலங்கள், வழங்கப்பட்டன. ஊர்வலத்தில் கரகம், காவடி, ஒயிலாட்டம், மயிலாட்டம், பொய்க்கால் குதிரை என்று ஆட்டங்கள் வேறு. திருவிழாதான் போங்கள்!

●● அமைச்சர் பொன். முத்துராமலிங்கம் கரகாட்டக்காரர்களோடு சேர்ந்து ஆடிக் கொண்டு வந்தது தமாஷாக இருந்தது.

●● என். வி. என். சோமு, சி. டி. தண்டபாணி, நீலநாராயணன் ஆகியோர் மேடையில் நின்று கொண்டு, கையிலுள்ள நோட்டுப் புத்தகங்களில் ஏதேதோ குறித்துக் கொண்டிருந்தார்கள். என்னவென்று விசாரித்த போது கழகத்தின் எந்த அணி சிறப்பாக அணிவகுத்து வருகிறது என்றும், எந்த அலங்கார வண்டி சிறப்பாக இருக்கிறது என்றும் தேர்ந்தெடுப்பதாகச் சொன்னார்கள். எந்த அணிக்கு முதல் பரிசு? சந்தேகமென்ன, ஸ்டாலின் தலைமை வகித்த இளைஞரணியினருக்குத்தான்!



●● விடுதலைப் புலிகள் போல் வேஷம் போட்டுக் கொண்டு கைகளில் துப்பாக்கி வைத்துக் கொண்டு வந்த இருவரையும் கூர்ந்து பார்த்தார் பிரதமர்.

●● பிரதமர் பேச்சை, வை. கோ. மொழிபெயர்ப்பார் என்றவுடன் கூட்டத்தில் கைத்தட்டல். ஆனால் அவர் மொழிபெயர்த்த விதம் இருக்கிறதே.. ஒரே சொதப்பல்தான் போங்கள்.

●● தி.மு.க. வினருக்கு ஒரு வேண்டுகோள். இனி மின் பல்புகளால் பிரதமரின் உருவத்தை அமைக்காதீர்கள். பெண்களும், குழந்தைகளும் பிரதமரை 'எம். ஜி. ஆர். எம். ஜி. ஆர்.' என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

— ப்ரியன்

படம்: ராஜன்



* எம். ஜி. ஆருக்குச் சமமா?

## நீங்கள் கேட்டவை — தராசு

* வி. வேங்கடராமன், சீர்காழி.

? 'கல்கி' என்பதற்கு என்ன அர்த்தம் என்று விளக்கி இருந்தீர்கள். 'கல்கி கிருஷ்ணமூர்த்தியின் மனைவி பெயர் கல்யாணி; அதில் முதல் இரண்டு எழுத்துக்களும் தமது பெயரில் முதல் எழுத்தும் சேர்த்துக் 'கல்கி' என்று புனைபெயர் வைத்துக் கொண்டார்' என்று சில பெரியவர்கள் குறிப்பிட்டது தவறா?

! தவறுதான். அதேபோல், 'தமது பத்திரிகைத் துறை ஆசானான திரு. வி. கல்யாணசுந்தரனாரின் பெயரிலிருந்து முதல் இரு எழுத்துக்களை எடுத்து, அத்துடன் தமது பெயரின் முதல் எழுத்தை இணைத்தார்' என்ற கருத்துக்கும் ஆதாரமில்லை.



* குற்றச்சாட்டு...

* ர. சந்திரசேகர், ஈரோடு.

? நடித்தவருக்கெல்லாம் பளிங்குக் கல்லறை கட்டிக் கற்பூரம் காட்டும்போது, உலக மறை தந்த வள்ளுவருக்குச் சிலை வைப்பது தவறா?

! வள்ளுவருக்குச் சிலை வைப்பதில் தவறு இல்லை. அதற்குக் கணக்கு வழக்கு இன்றி மக்களின் வரிப் பணத்தைச் செலவழிப்பதுதான் தவறு. வரி செலுத்தும் குடிமகன், அது பல்வேறு வடிவங்களில் மக்களுக்கு நன்மையாகத் திரும்ப வரும் என்றுதான் எதிர்பார்க்கிறான். தொழில் வளம், வேலை வாய்ப்பு, மின் உற்பத்தி, சாலைகள் என்று ஆக்கபூர்வமாகச் செலவாக வேண்டும் வரிப் பணம். அதனைத் தன்னிஷ்டத்துக்கு விரயம் செய்யும் உரிமை அரசுக்கு — ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்பவருக்கு இல்லை. 'கல்கி' பாரதி மண்டபம் கட்டினார் என்றால் ஊர் ஊராகச் சென்று, வீடு வீடாக ஏறி இறங்கி, பணம் வசூலித்துக் கட்டினார். கலைஞரும் அண்ணா அறிவாலயம் எழுப்பினார். இப்படி கணிசமான நன்கொடை பெற்ற பிறகு, மக்களின் ஒப்புதல் கிடைத்து விட்டதாகக் கருதி, அரசும் ஒரு சமமான தொகை நன்கொடை வழங்கலாம். இப் பணிக்கு, வள்ளுவர் சிலை விஷயத்தில் முதல்வர் இப்போது செயல்படும் விதம் சட்ட விரோதமானது அல்ல; ஆனால் ஜனநாயக நல் மரபுகளுக்கு முரணானது.

* ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? 'ஆங்கிலம் ஒழிந்தால்தான் பிற்பட்ட சமுதாயத்தினர் முன்னேற முடியும்' என்று முலயாம் சிங் யாதவ் கூறியிருப்பது எதைக் காட்டுகிறது?

! இந்தியை அரியாசனத்தில் அமர்த்தி, ஏகாதிபத்தியம் நடத்தப் பல்வேறு தந்திர முயற்சிகள். அதில் இதுவும் ஒன்று. "தமிழைத் திணிக்கத்தான் வந்திருக்கிறேன்; இந்தியை அல்ல" என்பது மற்றொன்று.

* மணிவண்ணன், வேலூர்.

? 'தமிழகத்தில் ஜனதா தளம் ஆட்சியைப் பிடிக்க வேண்டும்' என்று சௌடாலா கூறியுள்ளாரே?

! சிவாஜியைக் கேலிப்படுத்தப் பேசப் பட்ட டயலாக் அது. இதைத்தான் 'சவடால்' என்பது.

* தஞ்சைத் தரணியன், முத்துப்பேட்டை.

? சந்தனக் கடத்தல் வீரப்பன் தனது முகத்தைப் பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொண்டு விட்டானாமே?

! நீங்கள் சொல்வதைப் பார்த்தால், இப்போது பிடிபட்டுள்ள ஆட்டோ சங்கர் 'டூப்' தான் என்று அடிபடும் பேச்சில் கூட அர்த்தமிருக்கும் போலிருக்கே!

* ஏ. எம். பழனிச்சாமி, கோவை.

? தமிழகத்தில் பதின்மூன்றாவது பல்



* புகழுக்கா? பணத்துக்கா?



* இமரென்று...

# எம். ஜி. ஆருக்குச் சமமாகி விட்டாரா ஜெ..?

கலைக் கழகம் திறக்கப்பட்டது குறித்து?

! கல்லூரிகள் ஆரம்பிக்கத்தான் தடை. பல்கலைக் கழகங்கள் எவ்வளவு வேணு மானாலும் தொடங்கி, மேலும் மேலும் வேலையில்லாப் பட்டதாரிகளை ஏராள மாக உருவாக்கலாம்!

* குலசை கே. எம். நஜ் முதீன், உடன்குடி.

**? அரசியல்வாதி, ஆன்மிகவாதி இருவ ருக்கும் இடையே உள்ள வேறுபாடு என்ன?**

! காந்திஜி விரும்பியது போல், அரசியல் வாதிகள், ஆன்மிகத்தை மதித்துக் கை விடாமல் இருந்தால், ஆன்மிக வாதிகள் அரசியலில் புக அவசியம் இராது. ஆன்மிகத்தை மறந்த அரசியல் ஆபத்தா னது. ஆன்மிகவாதிகள் அரசியல் பண்ணு வது அதை விட ஆபத்தானது!

* அ. முஸ்தபா, தக்கோலம்.

**? மாமியார் வீட்டில் அதிகபட்சமாக எத்தனை நாள் தங்கலாம்?**

! காப்பி, சாம்பார் இவற்றில் தண்ணீர் சேருவதன் அளவைப் பொறுத்து நிர்ண யிக்கப்பட வேண்டிய விஷயம் அது.

* கே. ரமேஷ்ராம், செங்குன்றம்.

**? அமெரிக்க ஓபன் டென்னிஸ் போட்டி முடிவுகள் எதைக் காட்டுகின்றன?**

! காப்ரியெல்லா ஸபாடினிக்கும் ரவி சாஸ்திரிக்கும் இடையே இருந்து வந்த 'இது' இரண்டு பேருக்கும் நல்லது பண்ணவில்லை. 'இது' முறிந்து ரவி, டில்லி பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டதுமே பாருங் கள், ரவி, இங்கிலாந்து டூரில் சக்கைப் போடு போட, ஸபாடினி, ஸ்டெஃபியைத் தோற் கடிக்க... இரண்டு பேருக்குமே கொடி கட்டிப் பறக்கிறது!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

பொ. முருகன்,
காந்தி ரோடு,
குடியாத்தம் — 635 803.

* முருகன், குடியாத்தம். *

**? மு. க. ஸ்டாலின் நடிப்பது புகழுக்கா, பணத்துக்கா, பெருமைக்கா?**

! 'இப்போதைக்குப் புகழுக்கும் பெருமைக் கும் நடித்து வைத்தால் நாளைக்குப் பணமும் வந்து சேராதா' என்ற எண்ணம்தான்.

* கவிட் ரவி, கும்பகோணம்.

**? எம். ஜி. ஆருக்குச் சமமாகி விட்டாரா ஜெயலலிதா?**

! அவரை விடப் பல படி மேலே போயாச்சு! "கழகத்தின் காவல் தெய்வம்" என்கிறது ஒரு சுவரொட்டி! போதுமா!

* வே. செந்தில்குமார், கொங்கணாபுரம்.

**? 'தி. மு. க. தனது ஆடம்பர விழாவுக்குக் கோடி கோடியாகச் செலவிடுகிறது' என்று வாழப்பாடி குற்றம் சாட்டுகிறாரே?**

! கலைஞர் ஸ்டைலில் பதிலளிப்பது என் றால் "அப்னா உத்ஸவை விடவா?"

* ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

**? சௌடாலாவைக் காமராஜருடன் ஒப் பிட்டு இரா. செழியன் பேசியது பற்றி...?**

! இப்படித்தான் சில பேர், அவர்களிடம் நாம் வைத்திருக்கும் மதிப்பைத் திடீரென்று குறையச் செய்து விடுகிறார்கள்!


* சௌடாலாவைக் குஷிப்படுத்த...


* 'இது' முறிய...

# சிரிக்க வையுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்!

மவுண்ட் ரோடு. முதியவர் ஒருவர் பாய்ந்து வரும் வாகனங்களை அலட்சியப்படுத்தி, ரோட்டின் நடுப்புறம் நின்று கொண்டிருந்த டிராபிக் கான்ஸ்டபிளை நோக்கிச் சென்று, "ஜி. எச்சுக்கு எப்படிப் போகணும்?" என்று கேட்டார்.

கான்ஸ்டபிள் படு கேஷுவலாகக் கூறினார்: "இப்போ வந்தது போலவே திரும்பிக் குடுகுடுன்னு அந்தப் பக்கம் போங்க. உங்களை ஜி. எச்சுக்கு ஆட்டோமேட்டிக்கா எடுத்திட்டுப் போயிடுவாங்க!"

— ராஜேஸ்வரி ஹரிஹரன், சென்னை — 28.

ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். என் பக்கத்தில் ஒருவர் வந்து உட்கார்ந்தார். சர்வர் அவருக்கு இலையை விரித்து, அதன் மேல் 'டாண்' என்று அலட்சியமாகத் தண்ணீர் தம்ளரை வைத்து, "என்ன வேணும்?" என்றார் அதட்டலாக.

"முதலில் மரியாதை வேணும்" — சட்டென்று சொல்லிச் சிரித்து சர்வரைச் சிந்திக்க வைத்தார் அந்தப் பெரியவர்!

— பி. ஜி. பி. இசக்கி, சிவசைலம்.



"நம் மன்னர் ரொம்ப முன்ஜாக்கிரதைக்காரர்."

"எப்படி?"

"கவசத்தை எப்போதும் முதுகில தான் அணிவார்!"

— க. வெங்கடேசன், சென்னை — 88.

"என்னது! எல். கே. ஜி. யில படிக்கிற உங்க பையன் ஆயிரம் ரூபாய் பணம் கேட்கிறானா?"

"கிளாஸ் லீடராக நியமித்த டீச்சருக்கு நன்றி! நன்றி!!"ன்னு போஸ்டர் ஒட்டணுமாம்!"

— ஆர். மாலினி, மயிலாடுதுறை.

நேர்முகத் தேர்வில் கலந்து கொண்ட ஒருவர் ஒரு கேள்விக்குக் கூடச் சரியாகப் பதில் சொல்லவில்லை. பரிதாபப்பட்ட தேர்வாளர், ஒரு கேள்விக்காவது சரியாகப் பதில் சொல்லட்டும் என்ற நோக்கத்துடன் "ஐந்தாவது மாடியில் நடக்கும் இந்த நேர்முகத் தேர்வுக்கு நீங்கள் 108 படிகள் ஏறி வந்துள்ளீர்கள். தேர்வு முடிந்ததும் நீங்கள் எத்தனை படிகள் இறங்க வேண்டியதிருக்கும்?" என்று கேட்டார்.

பளிச்சென்று வந்தது பதில்:

"நான் லிப்டில் இறங்கி விடுவேன் சார்!"

— டி. கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

புது தில்லி. ரயிலுக்கு நேரமாகிக் கொண்டிருந்தது. ஆனால் பஸ் வரவில்லை. கடைசியில் ஓர் ஆட்டோ பிடித்து ஸ்டேஷனுக்குச் சென்று கொண்டிருந்தோம். சிறிது தூரம் போன பின்பு தான் பஸ் ஸ்டாண்டிலேயே பை ஒன்றைத் தவற விட்டு விட்டதைக் கவனித்தேன். உடனே நான் மட்டும் வேறு ஆட்டோ பிடித்து முன்பு நின்றிருந்த பஸ் ஸ்டாண்டை நோக்கி விரைந்தேன்.

நல்லவேளை என் பை 'அம்போ' என்றிருந்தது. பஸ்ஸுக்காக காத்திருந்தவர்கள் யாவரும் சற்றுத் தள்ளி நின்றனர். நான் பையை எடுக்கச் சென்றபோது பலரும் ''தொடாதே! அதில் பாம் இருக்கு'' என்றார்கள் பயத்துடன். நான் சிரித்துக் கொண்டே ''பயப்படாதீர்கள் இது என் பைதான்'' என்று கூறிக் கொண்டே ஸ்டேஷன் நோக்கி விரைந்தேன்.

— வி. ஜெயராமன், ராஞ்சி.

திருச்சி சத்திரம் நகரப் பேருந்து நிலையத்தில் கிராமத்து ஆசாமி ஒருவர் தன்னருகே நின்று கொண்டிருந்த 'டிப்—டாப்' ஆசாமியிடம் கேட்டார். ''எட்டரை பஸ் போயிடுச்சுங்களா?''

டிப்—டாப் ஆசாமி, ''அறிவு இருக்காய்யா, உனக்கு? மணி நாலரைதான் ஆவுது. எட்டரை பஸ் போயிடுச்சான்னு கேக்கறியே?'' எனப் பாய, அச்சமயம் பார்த்து ''எட்டரை'' என்ற பெயர்ப் பலகையைத் தாங்கிய பேருந்து ஒன்று நிலையத்தினுள் நுழைய அமைதியாகப் பேருந்தினுள் ஏறி அமர்ந்தார் கிராமத்து ஆசாமி.

டிப்—டாப் ஆசாமியின் முகத்தில் ஈயாடவில்லை!

— ஜானகிமைந்தன் எஸ். ராஜ கோபால், திருச்சி.

''என்ன ஸார் வேணும்...? சூடா இட்லி – வடைகறி; பேப்பர் ரோஸ்டு, 'ஸ்பெஷல்' ஆனியன் ரவா தோசை, கிச்சடி; ப்யூர் ஃபில்டர் காபி...? என்ன ஸார், எடுத்திட்டு வர்றது?''

''ஹி... ஹி...! உங்க ஹோட்டல்லே, கிரைண்டரா...? ஆட்டுக்கல்லாப்பா?''

— எஸ். பாபு, சென்னை – 1.

ரயிலில் சென்று கொண்டிருந்தேன். என் எதிரில் ஒருவர் பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். சிறிது நேரத்தில் மற்றொருவர், ''சார் கொஞ்சம் பேப்பர் தருகிறீர்களா?'' என்று கை நீட்டினார். இவருக்குக் கோபம் வந்து விட்டது. ''தந்தி பேப்பர் என்ன சார் விலை...?'' என்று பாய்ந்தார். பேப்பர் கேட்டவர் முகம் என்னவோ போல் ஆகி விட்டது.

ரயில் சென்னையை நெருங்குகிற சமயம் இவர் பேப்பரை வரிசைப்படுத்தி மடித்துப் பின் பக்கத்தில் இருந்தவரிடம் கொடுத்து விட்டு, ''ரொம்பவும் தேங்க்ஸ்'' என்றார்!

— ஸ்ரீமனோபாரதி,
பாண்டிச்சேரி – 13.



''நான் இங்கே காதல் திருமணங்களை நடத்தி வைப்பது உண்மைதான். அதுக்காக உங்க பிள்ளைகள் நடத்தி வைக்காத உங்களோட அறுபதாம் கல்யாணத்தை நான் இங்கே நடத்தி வைக்க நீங்க அடம்பிடிப்பது சரியில்லை!''

— விஜயா கண்ணன், மதுரை.

ஆசிரியர் பயிற்சிப் பள்ளி ஆண்டு விழா கலை நிகழ்ச்சி. 'அனார்கலி' ஓரங்க நாடகம் நடத்தினோம். இறுதிக் காட்சியில் உணர்ச்சியின் உச்சகட்டத்தில் சமாதி மேல் விழுந்து ''அனார்கலி அனார்கலி' என்று கதறுகிறார். ஆனால் பார்வையாளர்கள் கொல்லென்ற சிரிப்புடன் கை தட்டினர். காரணம் சமாதிக்காக நாற்காலியை வைத்து வெள்ளைத் துணியைப் போர்த்தி அமைத்திருந்தது. நடிகர் விழுந்த வேகத்தில் துணி நழுவி விழுந்து நாற்காலி நிற்க, அவையோர், 'ஆ... நாற்காலி... ஆ... நாற்காலி' எனக் கூறிச் சிரிக்க... நடிகரும் செய்வதறியாது சிரித்து விட்டார்!

— வி. செல்வ நடராசன், தாராபுரம்.

# வட்டமேஜை

# "சுருக்கென்று தைத்த தலையங்கம்!"

* அட்டைப் படத்தில் எவ்வளவு இயல்பாகப் புன்னகை செய்கிறாரோ, அதே போல் தம்முடைய பேட்டியிலும் எந்தவிதமான ஹிப்பாக்ரஸியும் இல்லாமல் இயல்பாய் — ஆனால் பொருட்செறிவுடன் பதிலளித்துப் பாராட்டுப் பெறுகிறார் எஸ். பி. பாலசுப்பிரமணியம். பேட்டியின் கேள்விகளும் வழக்கமான பாணியில் அரைத்த மாவையே அரைக்காமல், வித்தியாசமாக இருந்தது குறிப்பிடத்தக்கது.

கோவில்பட்டி. டி. எஸ். கண்ணன்.

* தமது வறுமை மிக்க கடந்த கால வாழ்க்கையை நினைவு கூர்ந்து, 'எனது கடந்த முப்பது வருட வாழ்க்கையை மீண்டும் உணர்ந்து அநுபவிப்பதற்காக வாழ ஆசைப்படுகிறேன்' என்ற எஸ். பி. பி. யின் வரிகள் மறக்க முடியாதவை. அவர் தம் எதிர்கால திட்டங்கள் நிறைவேற வாழ்த்துக்கள்.

சென்னை — 23. வி. இராமதாஸ்.

* தங்கள் தலையங்கம் தற்போதைய சூழ்நிலையில் சரியான ஒன்று. 'அன்பு மார்க்கமா? அடிதடி மார்க்கமா?' எனில், அன்புதான் தேவை என்பது அனைவரும் அறிந்த ஒன்று. அதைச் சுட்டிக் காட்டிய விதம் நன்று.

மதுரை. மனிதநேயன்.

* மதக்கலவரங்களினால் சிந்தப்படுகிற ஒவ்வொரு துளி இரத்தமும், இளைய தலைமுறையின் பிஞ்சு உள்ளத்தில் விதைக்கப்படுகிற ஒவ்வொரு துளி விஷத்துக்குச் சமமாகும் என்பதில் ஐயமில்லை.

குருசாமி பாளையம், கு. நாகராஜன்.

* தத்தம் மதத்தினைச் சேர்ந்தவர்களுக்கு வெறியூட்டி, தங்களைத் தலைவர்களாக(?) உயர்த்திக் கொள்ள நினைக்கும் சில மதவாதிகளுக்குச் சுருக்கென்று தைப்பது போல் தாங்கள் தலையங்கம் தீட்டியிருப்பது பாராட்டுக்குரியது. மேலும் தாங்கள் கோடிட்டுக் காட்டியிருக்கும் விஷயங்களை நம் போலீஸார் பின்பற்றுவார்களானால் நிச்சயம் மதக் கலவரங்கள் குறைய வாய்ப்புண்டு.

சென்னை — 2. இரா. சாந்தகுமார்.

* சகுபர் சாதிக்கின் 'மரணம்' சிறுகதையைப் படித்து முடித்தபோது, கனமான சோகம் சூழ்ந்து கொண்டு பாலமுருகன் போல் நம்மையும் அழ வைத்தது...!

பெங்களூர் — 13. கவிஞர் 'தாரகை'

* சாதிக் கலவரத்தால் உயிரிழந்தோரின் குடும்பங்களும், காயமடைந்தோரும் அரசு தரும் நஷ்டஈட்டினால் இழந்தவற்றை மீண்டும் பெற முடியுமா என வருந்துகையில், அரசு தரும் நஷ்டஈட்டைப் பெறத் தமக்கு எந்தக் காயமும் ஏற்படவில்லையே என்று வருந்துகிறார் பெரியவர் ஒருவர். இன்றைய உலகில் இப்படிப்பட்ட விசித்திர மனிதர்களும் வாழ்கிறார்கள் என்பதைக் காட்டியது 'நஷ்ட ஈடு' சிறுகதை.

மாணம்புச்சாவடி. இரா. ஆதிநாராயணன்.

* ஒரு சாதாரண விளம்பரப் படத்திற்கே ஐந்து லட்சம் செலவாகிறது என்றால் சினிமா படத்திற்கு எவ்வளவு செலவாகும்? நினைத்தே பார்க்க முடியவில்லை!

சீர்காழி — 11. ராஜ. நடராஜன்.

* 'சுதந்திர மவி!' கருத்துப்படம் கண்டு வயிறு வலிக்கச் சிரித்து விட்டேன். அப்பா... அபாரம்! எங்களைச் சிரிப்பின் உச்சிக்கே கொண்டு சென்று விட்டார்கள்!

உடன்குடி. குலசை. நஜ்முதீன்.

* படு டென்ஷனோடும் பதைபதைப்போடும் குவைத்திலிருந்து சென்னைக்குத் தப்பி வரும் வேளையிலும், தம் மகனுக்காக வாங்கி வைத்த சட்டையை ஓர் ஈராக்கியச் சிறுவனுக்கு பி. ஸ்ரீநிவாசரங்கநாதன் மனம் நெகிழ்ந்து கொடுத்தது, நம்மைப் பெருமைப்படச் செய்து விட்டது.

தஞ்சை. பா. சு. பிரகாஷ்.

* மக்களவையில் ஆதரவு தெரிவித்து விட்டு (பிரசார் பாரதி மசோதாவை) மாநிலங்களவையில் எதிர்ப்புத் தெரிவிக்கும் ராஜீவின் கோமாளித்தனத்தைக் கார்ட்டூன் நச் சென்று விளக்கியது!

சென்னை — 82. எஸ். யோகலிங்கம்.

* 'தமிழ் சினிமா முன்னேறியிருக்கிறதா?' என்ற கேள்விக்குச் சினிமாவில் உள்ள அத்தனை தொழில் நுட்பத்தையும் அலசி ஆராய்ந்து மாணவர்கள் சொல்லியுள்ள கருத்துக்கள் யாவும் திரையுலகத்தினரே சிந்திக்க வேண்டிய சுட்டுரையாக அமைந்திருந்தது.

கும்பகோணம் — 1. எஸ். வி. ரவி கணேஷ்.

* **கல்கி 16.9.90 இதழில், 42 ஆம் பக்கத்தில் வெளியான துணுக்கில் "தபால் தந்தி அலுவலகத்தில் சார்ட்டராக வேலை பார்த்து" என்று எழுதுவதற்குப் பதிலாகப் 'போர்ட்டர்' என்று பிரசுரித்து விட்டீர்களே! நாங்கள் என்ன காதில் பூ வைத்தவர்களா?**

**எடுத்துக்கட்டி. டி. லோரா எலிசபெத் சீட்டா ராணி.**

* கல்கி 9.9.90 இதழில் என்னுடைய பேட்டியை வெளியிட்டமைக்கு இதயமார்ந்த நன்றி. ஆனால் என்னுடைய பேட்டிக்கு நான் சொல்லாத செய்தியைத் தலைப்பாக வெளியிட்டிருப்பது என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. என்னைப் பேட்டி காண்கிற நேரத்தில் எந்த இடத்திலும், "இதுவரை ஏதும் செய்யவில்லை" என்று நான் குறிப்பிடவில்லை.

பட்டுக்கோட்டை. கா. அண்ணாதுரை, சட்டமன்ற உறுப்பினர்.

**('இதுவரை எனது தொகுதி மக்களுக்கு ஏதும் செய்யவில்லை. அதனால்தான் பட்டுக்கோட்டையில் ஒரு பொறியியல் கல்லூரி கொண்டு வருவதிலும், தென்னை நார் தொடர்பான தொழிற்சாலையொன்றைக் கொண்டு வருவதிலும் மிகவும் தீவிரமாக இருக்கிறேன். எப்பாடுபட்டாவது இந்த இரண்டையும் கொண்டு வந்து விடுவேன்' என்று எம். எல். ஏ. அண்ணாத்துரை சொன்னதைத்தான் நான் எழுதியிருக்கிறேன். சொல்லாத எதையும் எழுதவில்லை.**

**— இளங்கோவன்.)**

தீபாவளி திருநாளில் முக்கியத்துவமும்,

உங்களுக்கு ஒரு வேண்டுகோளும்.



வரும் தீபாவளித் திருநாளை வெகு விமரிசையாகக் கொண்டாட இப்பத்திரிகை படிக்கும் அன்பு உள்ளங்களுக்கு சிவானந்த ஆசிரமக் குழந்தைகளும் முதியோர்களும் தங்களின் வாழ்த்துக்களை மனமுவந்து தெரிவிக்கிறார்கள். பண்டிகை நாட்களில் நிதி உள்ளவர்கள் தத்தம் நிலைமையினை அனுசரித்து விழாக்களைக் கொண்டாடுகிறார்கள். இந்தத் திருநாளில் பல்லாயிரக் கணக்கான இளம் நெஞ்சங்கள், ஆதரவற்றோர், பார்வை இழந்தோர், மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள், சிறைக்கைதிகள், முதியோர், வசதியில்லாதோர், உடல் ஊனமுற்றோர் பண்டிகையைப் பொருள் இல்லாமல் கொண்டாட இயலாதவராக இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்குத் தாங்கள் மனமுவந்து பொருளாகவோ, நிதியாகவோ, துணியாகவோ, பட்டாசுகளாகவோ கொடுத்து உதவி செய்து ஆத்ம திருப்தி அடையலாம். எந்த ஒரு பண்டிகையிலும் நம்முடைய பொருளில் சிறிதேனும் பிறருக்கு ஈந்தால், அந்தப் பண்டிகையின் மகிழ்ச்சியினையும், பிறருக்கு உதவினோம் என்ற ஆத்ம திருப்தியும் கிடைக்கப் பெற்றுப் பேரானந்தம் அடையலாம். தாங்கள் அருகிலுள்ள சேவை ஸ்தாபனத்திற்குச் சென்று உங்கள் மகிழ்ச்சியினைப் பகிர்ந்து கொள்ளுங்கள்.

சிவானந்த ஆசிரமத்தில் உள்ள சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளும் முதியோர்களும் இத்தீபாவளித் திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாடப் பொதுமக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் தலா 1 ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால் இத்திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூர்ணமாக நிறைவேறும் என்பதோடு இல்லாமல், இந்நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோரும் பயன் பெறுவர்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடைப் பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். வருமான வரி விலக்கும் அளிக்கப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியைப் பணமாக அல்லது பொருட்களாக,

**நிர்வாகி,**

**''சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்''**

**நெ.20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்**

**சென்னை 600 059.** தொலைபேசி: 401078 402354

என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.



ஏ. ஆர். ஆர்.
அளிக்கும்
சுகந்த சுப்பாரி
எல்லோருக்கும்
உசுந்த சுப்பாரி
முக்கனி போல
மூன்று
சுவைகளிலே!



இன்சுவை கூட்டும்
ஏலக்காயுடன் பழங்களின்
மணமும் சேர... இந்த
சுவைக்கு இணை ஏது?



ஃப்ரூட்டி



ஃப்ரூட்டி ஏலக்காய்





மில்க்கி ஏலக்காய்





பாக்கின் சுவை கூட்ட
பழச்சுவை சேர்ந்தது
பாக்கும் பழமும் கலந்த
பரவசமூட்டும் சுவை



நலம் தரும் பால் மணம்.
அத்துடன் சுவை
சேர்க்கும் ஏலக்காய்...
என்னே இதன் சுவை!




தரத்திற்கு
மூன்றெழுத்து
ஏ.ஆர்.ஆர்.

தயாரிப்பாளர்கள்
ஏ.ஆர்.ஆர். எண்டர்பிரைசஸ்

தபால் பெட்டி 5,
126, ஏ.ஆர்.ஆர். ரோடு,
கும்பகோணம் - 612 001.
போன்: 20121

CP/ARR/001/90/TAM



## பாலைவனப் பறவைகள்

புதுமுகம் என்கிற காரணத்தாலேயே உதயன் முதுகில் அதிகமான சுமை ஏற வில்லை இயக்குநர் செந்தில்நாதன். காதலித்து, கனவுகள் பல கண்டு, அந்தக் காதலியின் காரணமாகவே செய்யாத ஒரு கொலையைச் செய்து விட்டதாகப் பழிசுமத் தப்பட்டு, சிறையினுள் அடைபட்டு, "நான் நிரபராதி" என்று நாள்தோறும் புலம்புவ தோடு சரி.

தரணி காதலிக்கும் போதும் சரி, கண்ணீர் விடும் போதும் சரி, அவர் முகத் தில் தெரியும் இயற்கையான சோகம் வசதி யான சாய்வுமணை.

விதேசிப் படங்களை நினைவு படுத்தும் இருவர் ஆனந்த்ராஜ் — சரத்குமார். படத் தின் முழுப் பளுவையும் சர்வ அலட்சிய மாக அவ்விருவரும் தாங்கி நிற்பதில் இடம் பெறுவது, வில்லத்தனம், நகைச்சுவை, சோகம் எல்லாம் இணைந்துள்ள கலவை.

ஜெயில் அதிகாரியாக இருப்பவர் முரட் டுத்தனமாக மட்டுமே நடந்து கொள்ள வேண்டுமா, என்ன? அவசியம் இல்லை யென நிரூபணம் செய்கிறார் ஜெய்சங்கர்.

கதை, வசனம் — கஜேந்திரகுமார். இசை — இளையகங்கை. இரண்டுமே சர்வலகு.

நிரபராதியான ஒருவன் தண்டிக்கப்பட்டு விட, அதைக் கண்டு மனம் பொறாத சிறை யதிகாரி உண்மைக் குற்றவாளியைக் கண்டு பிடிக்கும் பணியில் தூக்குத் தண்டனை நிறை வேறக் காத்திருக்கும் இரு கைதிகளைத் துணிந்து வெளியே அனுப்புவதும், அவர்கள் அதை வெற்றிகரமாகச் செய்து முடித்து விட்டு உரிய நேரத்தில் திரும்பி வந்து தூக்குக் கயிற்றில் கழுத்தை நீட்டுவதும், என்னதான் சுவாரஸ்யமான கற்பனையாக இருந்தாலும்... அங்கே தான் இடிக்கிறது.

பழகிப் போய் விட்ட ஒரு கதைத் தடத்தை அறவே நம் பார்வையிலிருந்து மறைந்து போகச் செய்து விடும் மம்முட்டி. மென்மையானவொரு அகங்காரத்தை வெளிப் படுத்தி, அட்டகாச நடை நடந்து, எவருக்கும் பயப்படாமல் படம் முழுதும் வியாபிக்கும் மம்முட்டி.

சட்டத்தையும் நீதியையும் பற்றிக் கவலைப் படாத கடத்தல் (சாம்ராஜ்ய) மன்னன் அலெக்சாண்டராக, முன்னாலும் பின்னா லும் இரண்டு கார்களில் பாதுகாவலர்கள் வர, நடுவே ஒரு சொகுசான படகுக் காரில்

## சாம்ராஜ்யம்



மிடுக்குடன் பவனி வந்து —

அந்தக் கடத்தல் மன்னனை எப்படியும் பிடித்து விட வேண்டும் என்கிற தீவிரத் துடன் முனையும் போலீஸ் ஐ. ஜியைச் சாட் சியம் கிடைக்காமல் திணறிப் போகச் செய் யும் அதே நேரத்தில் —

அலெக்சாண்டரின் இதயத்திலுடைய மென்மையான இன்னொரு பகுதியையும் உணர்த்தும் படியான திருப்பம் அவன் வாழ்க்கையில் உருவாவது சுவாரஸ்யமான நிகழ்ச்சி.

மம்முட்டியின் நடிப்பில் காணப்படும் இயல்பும் நயமும் கதையோட்டத்தில் அங்கங்கே இடம் பெற்றுள்ள ஓட்டை களைப் பூசி மெழுகி விடுகின்றன.

பழிவாங்கும் முயற்சியில் வெற்றி பெற் றாலும் அதன் பக்கவிளைவாகத் துப்பாக்கிச் சூட்டில் அலெக்சாண்டர் உயிரிழக்க, அவனுடைய சின்னஞ் சிறு மகனைத் தங்கள் தலைவனாகக் கடத்தல் கையாட்கள் ஏற்று, முன்னும் பின்னும் இரண்டு கார்களில் அவர்கள் பாதுகாப்பாக வர, தந்தையின் படகுக் காரில் மகன் நடுவில் செல்வதைக் கடைசிக் காட்சியாக, அமைத்திருக்கிறார் களே, அந்த முடிவுதான் ஏற்க முடியாததாக இருக்கிறது.

ஒரு கடத்தல் காரனின் மகன் இன்னொரு கடத்தல் காரனாக உருவெடுக்கத்தான் வேண்டுமா, என்ன?

— சி. ஆர். கே.

* சி. எச். கோபிநாத்ராவ்








# ராஜகோபுரத்தில் விரிசல்கள்

ஸ்ரீரங்கம் ராஜகோபுரத்தில், விரிசல்கள் ஏற்பட்டுள்ளதாகவும், அந்த விரிசல்கள் இந்த ஆண்டு அதிகரித்திருப்பதாகவும் 'இந்து' நாளிதழில் பொறியாளர் ஒருவர் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். ராஜகோபுரத்தைப் பாதுகாக்க அரசாங்கம் ஓர் ஆணை பிறப்பித்திருப்பதாகவும் தெரிய வருகிறது:

- ராஜகோபுரத்தைச் சுற்றிப் பத்து மீட்டருக்குள் உள்ள கட்டடங்களை அப்புறப்படுத்த வேண்டும்;
- திருச்சி மாவட்ட ஆட்சித் தலைவர், பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்;
- அங்கே பட்டாசு முதலியவை வெடிக்காது பார்த்துக் கொள்ள வேண்டும்;
- கோபுரத்தின் மேல், மக்கள் கூட்டத்தாலோ அல்லது வேறு எந்த விதத்தாலோ பளு அதிகரிக்காதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்;
- ஏதாவது விரிசல்கள் தென்பட்டால் உடனே அவற்றை அடைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

ஆனால் இதுவரை கோபுரத்தைச் சுற்றிப் பத்து மீட்டர் சுற்றளவுக்குள் உள்ள கட்டடங்களை அகற்றுவதற்கான ஏற்பாடுகள் எதுவும் செய்ததாகத் தெரியவில்லை. பாதுகாப்புக்கு ஏற்ற கண்காணிப்பு ஏற்பாடுகளைச் செய்ததாகவும் தெரியவில்லை.

இதுபற்றிக் கட்டடக் கலை நிபுணர் ஒருவரிடம் கருத்துக் கேட்டு எழுதினால் பலருக்கும் நிம்மதியாக இருக்குமென்று சென்னையைச் சேர்ந்த கல்கி வாசகி திருமதி பவானி சந்திரசேகரன் யோசனை தெரிவித்திருந்தார். அவர் யோசனையின்படி கட்டடக்கலை வல்லுநர் சி. எச். கோபிநாத் ராவ் அவர்களிடம் கேட்டோம்:

"ஸ்ரீரங்கம் ராஜகோபுரத்து விரிசல்களை நான் நேரில் பார்த்து நுணுக்கமாக ஆராய்ச்சி செய்யவில்லை; என்றாலும் இதனை ஆராய நியமிக்கப்பட்ட நிபுணர் குழு அளித்த அறிக்கை சரியாகவே இருக்கிறது என்று கருதுகிறேன்.

"இந்த விரிசல்களை நேரில் பார்த்துச் சோதனை செய்து, விரிசல் இன்னும் ஏற்படுவதைத் தடுக்கவும், ஏற்பட்ட விரிசல்களை அடைக்கவும், போதுமான பொறியியல் அறிவும், தொழில்நுட்பத் திறனும், அதற்குத் தேவையான சாதனங்களும் தமிழ் நாட்டிலேயே உள்ளன. ஹைவேஸ் ரிசர்ச் ஸ்டேஷன், ஐ.ஐ.டி. ஸ்ட்ரக்சுரல் இன்ஜினியரிங் ரிசர்ச் சென்டர், ரீஜனல் இன்ஜினியரிங் காலேஜ் போன்ற நிறுவனங்கள், மேற்படி குறைகளைக் குறுகிய காலத்திலேயே வெற்றிகரமாக நிவர்த்தி செய்ய முடியும். திறமையும், நிபுணத்துவமும் உள்ளவர்கள் அருகிலேயே இருப்பதால், ராஜகோபுரத்தைப் பழுது பார்க்கவும், பராமரிக்கவும் அதிகாரிகள் உடனே நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்."

— சித்தார்த்

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392




# KUMARAN SILKS

Where many things are happening.

12, Nageswaran Road, Opp: Panagal Park, T. Nagar, Madras 600 017. Phone: 443544, 447777.

We have no branches anywhere.